நெருக்கமான நெசவு. நீடித்த உழைப்பு.
பூர்த்தியழகு எல்லாவற்றிலும்

# கோத்தாரி மல்கள்

## மேம்பட்டவை

லாங்கிளாத்துகளுங் கூட!

...ஏனென்றால்

- கோத்தாரி மல்கள், லாங்கிளாத்துகளை தயாரிக்க பயன்படும் நூல் உயர்ந்தரகக் கோத்தாரி நூலாகும்.
- சுயமாக இயங்கும் விசைத்தறியில் நூலிழைகள் நெருக்கமாக செய்யப்படுகின்றன.

எப்பொழுதும் கோத்தாரி மல் எம். 7 என்றும்
லாங்கிளாத் எல். 1 அல்லது எல். 2 என்றும்
பெயரைக் குறிப்பிட்டுக் கேளுங்கள்.

இந்த டிரேட் மார்க்கையும்
கவனியுங்கள்







தயாரிப்பாளர்கள்:
கோத்தாரி டெக்ஸ்டைல்ஸ்
லிமிடெட்

சிங்காநல்லூர், கோயமுத்தூர்.
[illegible] மெம்பர்—
இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் இன்ஸ்டிடியூஷன்
ஸோலிங் ஏஜண்டுகள்:
கோத்தாரி & ஸன்ஸ்
ஓரியண்டல் பில்டிங்ஸ்,
அரமேனக்காரத் தெரு,
சென்னை-1.

✳ ✳ ✳ பின்னியின் தூய பட்டு – பிரத்தியேக வகைகள் ✳ ரிவர்ஸிபிள், மற்றும் ஷாட் ஸில்க் புடவைகள் ✳ ஜார்ஜெட், ஷிப்பான், மேன்பட்டு தினுசுகள் ✳ கண்ணிய மான தோற்றமளிக்கும் தூய ஸில்க் ஷர்ட்டிங்

கண்கவரும் பல மோஸ்தர்களில் கிடைக்குமிடம் :



## வெங்கடேஷ் வஸ்திராலயா

ஷோ ரூம்கள்; மதுரை ஹைகோர்ட்டுக்கு எதிரில்
பார்ட்னர்கள், S. வெங்கடேஸ்வர அய்யர், V. சிவராமன்

# இடுப்பு வலியால் ராஜன் பட்ட பாடு...










உலகப்புகழ் பெற்ற வலி நிவாரணியான ஸாரிடான் துரிதமாக, கெடுதல் எதுவுமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. முதுகுவலி, தலைவலி, பல்வலி, ஜுரம் வரும் போலிருப்பது, ஜலதோஷம் இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். பெரியவர்களுக்கு ஒரு வில்லை முழு டோஸ், குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.

**ஒரே ஒரு வில்லை**

# ஸாரிடான் 'ரோஷ்'




ஸாரிடான் ஒரே வில்லை போதும்
ஒரு வில்லை 13 பைசா

வலியைப் போக்குகிறது, ஆசுவாசப்படுத்துகிறது, புத்துணர்ச்சி யூட்டுகிறது

'ரோஷ்' தயாரிப்பு    ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

JWT/VT-1949 (a)



# கல்கி பொருளடக்கம்

குரோதி ஐப்பசி 2 — அக்டோபர் 18





## ஓர் உண்மை

கற்பனை நூறு படைத்திடினும்
  கட்சிகள் பேசி முழக்கிடினும்
கற்சிலை சிற்பம் செதுக்கிடினும்
  கடலலை முத்தை எடுத்திடினும்

அற்புதம் யாவும் நிகழ்த்திடினும்
  ஆயிரம் செல்வம் நிறைத்திடினும்
பொற்புள தோர்பொருள் உண்டதுதான்:
  போற்றிடும் உண்மை அதைப்பணிவோம்

வலைகடல் கப்பல் உகைத்திடினும்
  வானிடை ஊர்தி செலுத்திடினும்
நிலவினில் வாழ நினைத்திடினும்
  நீரினுள் சென்று மறைந்திடினும்

உலகினைச் சுற்றி வளைத்திடினும்
  உயிரினை மீண்டும் எழுப்பிடினும்
நிலையுள தோர் பொருள் உண்டது தான்:
  நேர்ந்திடும் உண்மை அதைத் தொழு
வோம்!

—சோமபுரம் தாமரைக்கண்ணன்



மலர் 24

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 12

# ஆலயப் பணியும் வரிகளும்

ஹிந்துக்களின் ஆலயங்களுக்கு அளிக்கப்படும் திரவிய உதவி ஹிந்து சமுதாயம் ஒன்றுக்கு மட்டுமே பயனுவதால், அதற்கு வருமான வரியில் விலக்கு அளிப்பதற்கில்லை என்று தமிழக உயர்நீதி மன்றம் தீர்ப்பு அளித்திருக்கிறது. தற்போது அமுலிலிருக்கும் வருமான வரிச் சட்டப்படி இந்த முடிவு நியாயமே. ஆனால் இதை அரசாங்கக் கொள்கையாக்கினல் நாட்டுக்கு நன்மையல்ல. அரசாங்கமானது பல்வேறு மதங்களைப் பாரபட்சமாக நடத்தக்கூடாது என்பதுதான் 'சமயச் சார்பின்மை' (secularity) என்ற சித்தாந்தமே யன்றி, எல்லா மதங்களின் வளர்ச்சிக்கும் ஒரேபோல் உதவி புரிவது சர்க்காரின் மதச் சார்பின்மையைப் பாதிக்காது. ஹிந்து ஆலயங்களுக்கு அளிக்கப்படும் நன்கொடைகளைப் போலவே மசூதிகளுக்கும் கிறிஸ்துவக் கோயில்களுக்கும் மற்ற மதங்களின் கோயில்களுக்கும் அளிக்கப்படும் நன்கொடைகளுக்கும் வருமான வரியில் விலக்கோ, தள்ளுபடியோ அளிப்பதுதான் முறையான 'மதச்சார்பின்மை' (secularity).

அகிலாண்டேசுவரி ஆலயத் திருப்பணிக்கோ, ராமேசுவர கும்பாபிஷேகத்துக்கோ, காசி விசுவநாத ஸ்வாமி உற்சவத்துக்கோ, ஏழுமலையப்பன் பிரார்த்தனைக்கோ அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு எவ்வித வரித் தள்ளுபடியும் கிடையாது; ஆனல் நேருஜி நினைவு நிதிக்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வரி விலக்கு உண்டு எனில் இந்நிலை இந்தியப் பண்புக்கு இம்மியும் ஒவ்வாதது.

நன்கொடைகள் இல்லாமல் ஆலயங்களையும் மற்ற மதஸ்தாபனங்களையும் எப்படி நிர்வகிக்க முடியும்? திருப்பணி நன்கொடைகளுக்குப் பெருத்த வரி போடுவது மத உணர்வின் வளர்ச்சிக்குக் குந்தகம் விளைவிப்பதாகும். ஆலயங்களும், சமய உணர்வை நல்ல முறையில் வளர்க்கும் ஸ்தாபனங்களும் நமக்கு வேண்டியதில்லையா? வேண்டுமெனில் அவற்றுக்கு நன்கொடைகள் கிடைப்பதற்குரிய ஊக்கத்தை அளிக்கவேண்டும். நன்கொடை கொடுக்க வேண்டுமானல் பெருந்தொகை வரியும் கட்டித் தீரவேண்டும் என்ருல் மக்கள் பின்வாங்குவார்கள். இந்த நிர்வாகத்தை 'மதச்சார்பின்மை' என்று பெரிய பெயரிட்டழைப்பது சரியில்லை; இதனை மத எதிர்ப்புக் கொள்கை என்றே கூற வேண்டும். பெரும் பசிகொண்ட சர்க்கார் கஜானுவின் நிலையை வைத்து ஆராயும் விஷயம் அல்ல இது. மத ஒழுக்கமும், தர்ம ஆசாரக் கட்டுப்பாடும் நம் மக்களின் சீலத்தை எவ்வளவு தூரம் பேணிக் காக்கிறது என்பதை மதித்து ஆராயவேண்டிய ஒரு பிரச்னை இது. சர்க்கார் காரியாலயங்களும், திட்டத்தின் கீழமைத்த ஆலைகளும் அணைகளும், நேருஜி நினைவுச் சின்னமும் மட்டும் நாட்டு வாழ்வுக்குப் போதாது. அவற்றைப் போலவே ஆலயங்கள், மசூதிகள், சர்ச்சுகள் இவையும் தேசிய வாழ்வுக்கு அவசியமாகும்; சரியாகச் சொல்லப் புகுந்தால், அவற்றைவிட அதிக அவசியமாகும். இதில் சந்தேகமே இல்லை. மக்களின் பண்பைக் காக்கும் சமய நிலையங்களைப் போஷிக்கும் நன்கொடைகளுக்கு நிச்சயமாக வரி விலக்கு அளிக்க வேண்டும்.

தேர்தல்களில் ஆளும் கட்சியின் பிரதானமான வசிய உபாயம் வகுப்புவாத உணர்ச்சியைத் தூண்டி விடுவதுதான். இதைத் தடுக்க வழி தேடாமல், சமய நிறுவனங்களுக்கோ, குறிப்பிட்ட வகுப்பினருக்காக ஏற்பட்ட தர்ம ஸ்தாபனங்களுக்கோ அளிக்கப்படும் நன்கொடைகளை 'வகுப்பு வாதம்' என்ற பெயரின் கீழ்க் கொண்டு வருவது அதர்ம

பதுக்கல் பண்டம் என்றெல்லாம் சர்க்கார் சோதனையிட்டுப் போலீஸ் தர்பார் நடத்துவதற்கு அடிப்படைக் காரணம் வரி உயர்வேயாகும். பொதுவாகச் சட்டத்துக்குக் கட்டுப்பட்டும், ஆண்டவனுக்குப் பயந்தும் நடந்து வந்த நம் நாட்டு வியாபாரிகள் இப்போது திடீரெனப் பதுக்கல்காரர்களாக மாறி விட்டார்கள் என்றால் அதற்குக் காரணம் அநீதியான வரி விதிதம்தான். வருகிற தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்களாகப் போட்டியிடக் கூடிய 'அதிருஷ்டசாலி' களைத் தவிர மற்ற எல்லோரும் இதை ஒப்புக் கொள்வார்கள்.

## தீரரை இழந்தோம்

இந்நாடு ஒருகாலும் இழக்கவொண்ணாத ஒரு பெருமகனை டாக்டர் ஏ. ஸ்ரீநிவாஸன் அவர்களின் மறைவில் இழந்துவிட்டது. எவ்விதமான சொந்த நலன்களையும் கருதாது, மனச்சாட்சியின் குரல் ஒன்றையே மதித்து தேச வாழ்வில் உள்ள குற்றம் குறைகளை எடுத்தியம்புபவர்கள் இந்நாட்டில் மிகச் சிலரே உள்ளனர். அந்தச் சிலரில் சிறந்த ஒருவராக விளங்கிய தீரர் ஸ்ரீநிவாஸன் நம்மை விட்டுப் பிரிந்தது மகத்தான துரதிருஷ்டம். தவறுகளைக் கண்டு கொதித்தெழுந்து இடித்துக் காட்டிப் புத்தி சொல்வதற்கு இன்னொரு ஸ்ரீநிவாஸனை என்று காண்போம்?

மேல்நாட்டு வைத்தியத்தில் அபார நிபுணத்துவமும், பிரக்யாதியும் பெற்றிருந்த டாக்டர் ஸ்ரீநிவாஸன் உள் நாட்டு வைத்திய முறைகளில் ஈடுபாடு கொண்டு அவற்றுக்கு ஊக்கமளித்தார். உடல் வியாதிகளுக்குச் சிகித்சை செய்ததோடு நாட்டைப் பீடித்துள்ள வியாதிகளுக்கும் மருந்து தேடினார். மேல் சட்டசபையில் வேல் போல் பாய்ந்து வரும் குறுக்குக் கேள்விகளுக்கு அவர் தனிப் பெயரெடுத்திருந்தார். சுய வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை என்றெல்லாம் எதுவும் வைத்துக் கொள்ளாமல் அவர் ஏகாங்கியாகவே இருந்ததால் தமது மருத்துவக் கடமையையும், தேசப் பணியையும் அப்பழுக்கில்லாத அந்தரங்க சுத்தத்துடன் ஆற்ற முடிந்தது. அந்தப் பெருமையே யாரிடமும் உள்ளது உள்ளபடி குறை கூறும் தீரத்தை அவருக்கு அளித்தது.



டாக்டர் ஏ. ஸ்ரீநிவாஸன்

குற்றம் கண்டு சினந்து பொங்கும் டாக்டர் அவர்கள் தமது நண்பர்களிடம் கடைப்பிடித்த சிநேக தர்மத்தையும், எந்தச் சந்தர்ப்பத்திலும் அவர்களுடன் துணிவாகத் துணை நின்ற பாங்கையும் அவரது அன்பர்கள் என்றும் மறக்க முடியாது. வெளிப் பார்வையில் ஆஸ்திகராகக் காட்டிக் கொள்ளாவிடினும் இதயத்தில் முருகனைப் பொதிந்து வாழ்ந்தவர் அவர். ஒற்றியூர் வடிவுடையம்பிகைக்கு வெள்ளிக் கவசம் செய்து அணிவித்த அவர் புனிதமான நவராத்திரி வெள்ளியன்று உயிர் பிரிந்து அன்னையை அடைந்துவிட்டார்!

## சட்டசபையும் நீதி மன்றமும்

நில ஆர்ஜிதச் சட்டத்தின் கீழ் தமிழகமும், பம்பாயும் செய்திருந்த இரண்டு சட்டங்கள் செல்லாது என ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்திருக்கிறது. இவ்வாறு எத்தனையோ சர்க்கார் சட்டங்கள் ஸுப்ரீம் கோர்ட்டில் ரத்து செய்யப்பட்டிருக்கின்றன. இதன் பொருள் என்னவெனில், அரசியல் மூலச் சட்டத்தைச் சர்க்கார் சரியாகப் பின்பற்றிப் புதுச் சட்டங்கள் வகுப்பதில்லை என்பதே. சட்டங்களைப் பிறழாமல் பின்பற்றும் பண்பை மக்களுக்கு எடுத்துக் காட்ட வேண்டிய சர்க்கார் இவ்வாறு சட்ட விரோதமான புதுச் சட்டங்கள் போடுவது மக்களுக்கு நல்வழி காட்டுவதற்குப் பதில் சட்டங்களைப்

திருமுருக கிருபானந்தவாரியார்

அளிக்கும்

# கந்தன் கருணை

கந்தபுராணத் தொடர் கட்டுரைகள்

கல்கி

நவம்பர் 8ந்தேதி இதழில் ஆரம்பமாகிறது

மாகும். மறைமுகமாக வகுப்பு உணர்ச்சிகளை வளர்த்துக் கொண்டே, அந்த உணர்ச்சியினால் ஏற்படும் சில நல்ல காரியங்களைத் தடுப்பது முறையல்ல. ஒவ்வொரு சமயத்திலும், ஒவ்வொரு சமூகத்திலும் செல்வந்தர்கள் இருக்கிறார்கள். இவர்கள் தங்கள் மதத்துக்கோ வகுப்பினருக்கோ தான தருமம் செய்ய இயல்பாகவே விரும்புகிறார்கள். இத்தகைய தான தர்மங்களுக்கு ஊக்கம் தருவதால் செல்வந்தர்களின் செல்வம் அந்தந்தப் பிரிவினரிலுள்ள ஏழைகளுக்குப் பயனாகிறது. இதுவும் சோஷலிஸம்தான். வரி போட்டு, சர்க்கார் காரியாலய விரயங்கள் போக, மீதமுள்ளதைக்கொண்டு 'சோஷலிஸம்' உருவாக்குவதைவிட இது சிக்கனமான முறை. எல்லா வகுப்பினரும் ஒன்று சேர்ந்தால் தேசம். எல்லா வகுப்புக்களின் சமய — தர்ம நிறுவனங்களும் வளர வசதி தந்தால் நிர்ப்பந்தமில்லாத நல்ல சோஷலிஸம் உருவாகும். திருவள்ளுவரும் காந்திஜியும் கூறிய ஒப்புரவு முறைக்கு இது ஒரு வழி. பிற வகுப்பினருக்கோ சமயங்களுக்கோ தீங்கு விளைவிப்பதும், வகுப்பு உணர்ச்சியால் உயர்வு — தாழ்வு கற்பிப்பதும்தான் தவறேயன்றி, குறிப்பிட்ட வகுப்புச் சார்புள்ள தான தர்மங்களில் தவறேதுமில்லை, ஆட்சிபீடத்தில் உள்ளவர்களும் அதிகாரிகளும் வகுப்புவாத உணர்ச்சியால் சலுகைகள் தருவதும், பட்சபாதங்கள் செய்வதும் தான் நாம் கருத்துடனிருந்து தடை செய்ய வேண்டிய பெரும் தீமை.

# பற்றாக்குறை பட்ஜெட்

தலைகால் புரியாமல் பற்றாக்குறை பட்ஜெட் போடுவது எவ்வளவு தவறு என்பதை நமக்கு எடுத்துக் காட்டியுள்ள சர்வ தேச நிதித் தலைவர் ஷ்வைட்ஸருக்கு நன்றி தெரிவிக்கிறோம். நோயாளியின் ரத்தத்தையே எடுத்து அவனுக்குச் செலுத்திக் குணப்படுத்தலாம் என எண்ணும் அறிவீனமே பற்றாக்குறை பட்ஜெட்டும் பணவீக்கமும். ஒரேயடியாகச் செய்யாமல், சிறிது சிறிதாக 'டோஸ்' அளவை அதிகமாக்கிக் காலக்கிரமத்தில் மரண அளவுக்குக் கொண்டு வரும் முறையை அரசாங்கம் கைவிடுமா? அல்லது இது 'நேரு மார்க்க'த்திலிருந்து விலகும் அக்கிரமம் என்று கருதுமா?

பணவீக்க முறையை நீடிக்கக் கூடாது என்று அகில உலகப் பொருளாதார நிபுணர் கூறி விட்டதால், இனி வரிச் சுமையை உயர்த்தியே சர்க்கார் வருமானத்தைப் பெருக்க எண்ணுவார்கள். இதைவிட மக்களுக்கு அரசாங்கம் இழைக்கக் கூடிய தீங்கு வேறு கிடையாது. நம் நாட்டில் தேசிய வருமானம் ஏதோ கொஞ்சம் உயர்ந்திருப்பதாகப் புள்ளி விவரங்கள் காட்டுகிறார்கள். ஆனால் இந்த உயர்வு நாட்டில் எல்லாப் பிரிவினரிடமும் சரிசமானமாக நிகழவில்லை. சிலரிடம் அதிகம் உயர்ந்திருக்கிறது. கோடிக்கணக்கான பலரிடம் வருமானம் உயரவே இல்லை. எனவே, தேசிய வருமான உயர்வை ஒட்டி, நாட்டில் எல்லா மக்களுக்கும் வரி விதிப்பது தகாது.

'வருமானத்தில் வரி எத்தனை சதவிகிதம்' என்று கணக்குப் போட்டு, இந்தியாவை விடச் சில மேல் நாடுகளில் வரி அதிக சதவிகிதம் என்கிறார்கள். வருமானத்தில் வரி எத்தனை விகிதம் என்று பார்க்கிற விஷயமல்ல இது. மொத்த வருமானம் எவ்வாறு பரவி நிற்கிறது என்று பார்க்க வேண்டும். இந்த நாட்டின் மொத்த வருமானத்தில் பெரும் பங்கு கோடிக் கணக்கான மிக ஏழைகளின் சொற்ப வருமானத்தின் காகித மொத்தம். சாப்பாட்டுக்குப் போதாத இந்தச் சிறு வருமானங்களுக்கு வரி போடுவது அதர்மம். முன்னொரு முறை ராஜாஜி கூறிய உவமையை மீண்டும் நினைவூட்டுகிறோம்: 'ராஜபவன விருந்தில் பரிமாறப்படும் உணவில் பலவகைப் பணியாரங்களை எடுத்து விட்டாலும் வயிறு நிரம்பும்; ஏழை உண்ணும் அரை வயிற்று அன்னத்தில் ஒரு பிடி எடுத்து விட்டாலும் அதைத் தாங்கமுடியாது' என்று அவர் கூறினார்.

எவ்வாறாயினும், தேசிய வருமான உயர்வைவிட நம் நாட்டில் வரிச் சுமை பெருமளவு உயர்ந்திருக்கிறது. கடந்த நாலாண்டுகளிலேயே வரிப் பளு 77 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. இனியும் வரியை அதிகமாக்கினால் நாடு உயிரிழக்க வேண்டியதுதான். வரிப் பளுவைக் குறைப்பதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டிய காலம் பிறந்து விட்டது.

வரிப் பளுவினால் பொருளாதாரம் நொடித்துப் போவது மட்டுமின்றி, இதன் விளைவாக நாட்டுக்கு ஏற்பட்டுள்ள மற்றொரு மாபெரும் கொடுமை மக்களின் நன்னடத்தைக் குன்றிப் போயிருப்பதாகும். கள்ளப் பணம்,

புறக்கணிக்கும் பாடமாகும். இதையொட்டி வரிப் பணத்தை ஏராளமாகச் செலவிட்டு ஸுப்ரீம் கோர்ட்டில் வழக்குகள் தொடுக்கப்படுகின்றன. வருமான வரியிலிருந்து தப்புவதற்காகச் சில தனி நபர்களுக்கு வக்கீல்கள் யோசனை சொல்லிக் கொடுப்பது போல், மூல சாஸனத்திலிருந்து 'தப்பி'ப் புதுச் சட்டங்கள் போடுவதற்குச் சட்ட மந்திரிகள் ஆலோசனை சொல்லித் தருவதன் விளைவே இது.

நீதி மன்றங்களை அவமதிப்பதில் காங்கிரஸ் ஆட்சியாளருக்குச் சமமாக யாரையும் சொல்ல முடியாது. காங்கிரஸ் சர்க்காரின் சட்டமௌதையேனும் நீதி மன்றத் தீர்ப்பு செல்லத் தகாது எனக் கூறினால் அந்தத் தீர்ப்பை மதிக்காமல், அதைவிடத் தாங்கள் இயற்றிய சட்டத்தையே பெரிதாக மதித்து, 'திருத்தம்' என்கிற பொய்ப்பெயர் வைத்துச் சாஸன மாற்றங்கள் செய்கிறார்கள். 1950ல் அமுலுக்கு வந்த சாஸனத்தை விட நேரு அவர்களின் கொள்கைகளையே மூல சாஸனமாகக் கொண்டு பழைய அரசியல் திட்டத்தை மாற்றி வருகிறார்கள். நீதிக்கும் நீதி மன்றத்துக்கும் கட்டுப்பட்டு நடப்பதில் மக்களுக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டிய சர்க்கார் இதற்கு நேர்மாறான திசையில் இப்போது மேலும் ஓரடி வைத்திருக்கிறது.

உத்தரப் பிரதேச சட்டசபையாளர் ஸ்ரீ கேசவ சிங்குக்கு அந்தச் சட்டசபை சிறைத் தண்டனை விதித்தது சரிதானா என்று ஆராயும் உரிமை அந்த ராஜ்ய உயர்நீதி மன்றத்துக்கு உண்டு என்றும், அந்த வழக்கை விசாரித்த இரு நீதிபதிகளைச் சட்டசபையில் ஆஜர்படுத்தி நடவடிக்கை எடுக்கச் சட்டசபைக்கு அதிகாரம் கிடையாது என்றும் நாட்டின் தலைமை நீதிமன்றமாகிய ஸுப்ரீம் கோர்ட்டின் தலைமை நீதிபதி தீர்ப்பளித்துள்ளார். இருதரப்புக்களையும் நன்கு விசாரித்து நாட்டின் தலைமையான நீதிமன்றம் அளித்துள்ள தீர்ப்பை அப்படியே ஒப்புக் கொள்வதுதான் முறை. ஆனால் மக்கள் சபையின் நாயகரும், சட்ட மந்திரியும் ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்பினால் சட்டசபைகளின் சில சுதந்திரங்கள் பாதிக்கப்படுவதாகப் பேசியிருக்கின்றனர். ஆனால் மக்களுக்குச் சட்டசபைகளிலும் மந்திரிசபைகளிலும் விட நீதிமன்றத்தில்தான் நம்பிக்கை.

அரசனையும் மந்திரிகளையும் கட்டுப்படுத்தி, மக்கள் உரிமைகளைக் காக்க வேண்டுமென்பதற்காக நீண்ட காலம் போராட்டம் நடத்திப் பிரிட்டிஷ் பார்லிமென்ட் உருவாயிற்று; மக்கள் உரிமைகளைக் காப்பதற்காகவே தனக்கென விசேஷ சுதந்திரங்களைப் பெற்றது. நம் நாட்டின் நிலைமை வேறு. இன்று ஆட்சியாளரைக் கட்டுப்படுத்தி, மக்கள் உரிமைகளைக் காக்க வேண்டியது தேசத்தின் தேவை. இதற்கு அதிகாரம் பெற்ற நிறுவனம் நீதிமன்றம்தான். சட்டசபைகளைவிடத் தங்கள் ஜீவாதார உரிமைகளைக் காத்துத் தருவது நீதிமன்றம்தான் என்று மக்கள் யாவருமே உணர்ந்திருக்கிறார்கள். இச்சமயத்தில் சட்டசபைகள் நீதிமன்றத்துக்குக் கட்டுப்படாமலிருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டுச் சட்ட மந்திரி பேசியிருப்பதை மக்கள் ஒப்ப முடியாது.

# என்ன சேதி?

## தேசப் பிரிவினைக்குத் தூண்டுகோல்

'பாரதம் இரண்டாகப் பிளந்து போவதற்காக எடுக்கப்பட்ட முயற்சி' என்று ராஜாஜி குறிப்பிடும் ஒரு திட்டத்தைத் தில்லி சர்க்கார் மேற்கொண்டுள்ளது. 1965 ஜனவரி 26ந் தேதியிலிருந்து மத்திய உள்துறை மந்திரி காரியாலயத்தின் எழுத்துத் தொடர்புகள் ஹிந்தியில்தான் இருக்க வேண்டும் என்பது புது ஏற்பாடு. இப்போதைக்கு இதை ஹிந்தி ராஜ்யங்கள் விஷயத்தில் மட்டும்தான் அமுலாக்கியுள்ளனர். இதனால் மத்திய ஸெக்ரிடேரியட்டில் உள்ள ஹிந்தி தெரியாத உத்தியோகஸ்தர்கள் கீழ்த்தரப் பிரிவினராவார்கள். 'மொழி மாறுதலுக்கேற்ற மனப்போக்கை வளர்க்க வேண்டி 1965 ஜனவரி 26ந்தேதிக்கு முன்னாலிருந்தே சில நமூனக்களை ஹிந்தியில் வெளியிட வேண்டும்' என்று சர்க்கார் அறிக்கை கூறுகிறது. மொழி வெறிக்குக் கள் வார்த்தாகி விட்டது!

## நாட்டுக் கலைஞர் மறைவு

புகழ்பெற்ற பொம்மலாட்டக் கலைஞர் ஏ. எஸ். மணி அய்யரவர்கள் திடீரெனக் காலமான செய்தி அதிர்ச்சியளித்தது. பொம்மலாட்டப் பொம்மைகளை நல்ல சாத்திரமாகவும், கலை அழகு மிகுந்தவையாகவும் செய்ததோடு ஆட்டத்துக்குக் கௌரவமான பின்னணிப் பாடலையும் அமைத்துத் தந்ததன் மூலம் அவர் தமது துறைக்குப் பெருமை தேடித் தந்தார். காஞ்சிபுரம் சதஸையொட்டி மக்களின் கவனம் நாட்டுக் கலைகளில் திரும்பியுள்ள இத்தருணத்தில் விற்பன்னர் மணி அய்யர் மறைந்தது நம் துர்ப்பாக்கியம்.

# அறிந்தீர்களா? இதுதான் உங்கள் பனாமா




1 தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப் புகையிலைகளின் கலவைப் பலனாக தண்மையான புகைநயம்—அதுவே உங்கள் பனாமா!

2 நாடெங்கும் நல்லின்பம் பரப்பும் மக்கள் ரகமாகிய பனாமா ஒத்த இனத்திலே உன்னத விற்பனையுள்ள ரகமாகும்.

3 நாட்டின் பல பகுதிகளிலே தலைசிறந்த ரகமாகத் திகழுவதும் உங்கள் பனாமா.

4 இன்று மக்கள் மனங்கவர்ந்துள்ள இருபதடங்கிய உறையினைப் பல்லாண்டுகளுக்கு முன் தோற்றுவித்த ரகமே பனாமாதான்.

கோல்டன் டொபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட்.  பம்பாய்.56

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

GT. (P) 635 A FM Greens' Advtg.



மகிழ்ச்சியோடு இரு காப்டன்களும் கைகுலுக்குகின்றனர்

ஆஸ்திரேலியாவில் சின்னஞ் சிறுவன் ஒருவன் மெல்போர்னில் டெஸ்ட் பந்தயம் பார்க்க வந்தான். மெல்போர்னை அடைந்த பிறகுதான் அவன் அவசரத்தில் தன் டிக்கெட்டை மறந்து வீட்டில் வைத்துவிட்டது நினைவுக்கு வந்தது. மறுபடியும் வெகுதூரத்திலுள்ள தன் வீட்டுக்குச் சென்று டிக்கெட் எடுத்து வரவோ, மறுபடியும் டிக்கெட் வாங்கவோ அவனிடம் பணமில்லை. ஆகவே 'யாரா' பூங்காவில் உள்ள மரத்தடியில் அமர்ந்து கொண்டு ஸ்கோர் போர்டைக் கண்ணும் கருத்துமாய்ப் பார்ப்பதும், 'டங் டங்' என்று மட்டையில் பந்து மோதும் ஒலியைக் கேட்பதுமாய்க் கிரிக்கெட்டை அநுபவித்தான் அந்தச் சிறுவன். விளையும் பயிரிலேயே கிரிக்கெட்டில் மோகம் கொண்ட அந்தச் சிறுவன்தான் இன்றைய ஆஸ்திரேலிய பிரதம மந்திரி மென்சீஸ். விளையாட்டுக் கலையில் இத்தகைய ஈடுபாடு மிக்க பிரதம மந்திரியைப் பெற்ற ஆஸ்திரேலியா இன்று கிரிக்கெட் விளையாட்டில் உன்னத நிலையில் விளங்குவதில் வியப்பில்லை. இங்கிலாந்தில் ஆஸ்திரேலியக் கோஷ்டியினர் பிரமாதமாக வென்று 'ஆஷஸ்' பெற்ற பெருமிதத்துடன் இந்தியாவுக்கு விளையாட வந்துள்ளனர். வெற்றித் தேவதையின் பரிபூரண அருள் பெற்ற ஆஸ்திரேலியக் கோஷ்டியினர் 'பூவா? தலையா?' பரிசோதனையில் முதல் வெற்றி பெற்றனர்; ஆட்டத்திலும் ஜயக்கொடி நாட்டி விட்டனர். ஆஸ்திரேலியக் கோஷ்டியின் முதல் வெற்றிக்கு அஸ்திவாரமாகத் திகழ்ந்தவர் பந்துவீச்சு நிபுணர் மெகன்ஸி. ஆஸ்திரேலியாவில் விளையாட்டுக் கலை ஆசிரியராகத் திகழும் மெகன்ஸி நமக்குச் சரியான பாடம் கற்பித்து விட்டார்! 1961ம் வருஷத்தில் மான்செஸ்டரில் நிகழ்ந்த டெஸ்டில் தோல்வியடையும் என்று எதிர்பார்த்த ஆட்டத்தில் கடைசி ஆட்டக்காரராக வந்து டேவிட்ஸனோடு ஆடி 98 ரன்கள் எடுத்து மெகன்ஸி ஆட்டத்தை வெற்றிப் பாதைக்குத் திருப்பியவராயிற்றே! சென்னை டெஸ்டில் முதலில் ஆஸ்திரேலியர்கள் சடசட வென்று கான்பூர் டெஸ்ட் போல் விக்கெட்டுகளை இழந்த பின் தம் பௌலிங் திறமையால் ஆஸ்திரேலியாவுக்கு மறுபடியும் உயிரூட்டியவர் இவர்தானே! முதல் இன்னிங்கில் மலிவான ஆறு விக்கெட்டுகளையும் இரண்டாம் இன்னிங்கில் நான்கு விக்கெட்டுகளையும் வீழ்த்திய மெகன்ஸி அனைவரது பாராட்டுதலுக்கும் இலக்காகி முதல் வெற்றியைத் தேடிக் கொண்டார்.

முதல் நாள் ஆட்டத்தில் ஆஸ்திரேலியர்களை 211 ரன்களுக்குள் 'அவுட்'டாக்கி அவர்களுக்குக் கிலியை உண்டாக்கியவர்கள் பந்து வீச்சு நிபுணர்களான நட்கர்னி, துரானி, கிருபால்சிங் ஆகிய மூவருந்தான். ஆனைப் பட்ட காப்டன் ஸிம்ஸனையே அழ அடித்து விட்டார் 'ஆல்ரௌண்டர்' நட்கர்னி. அவர் முதல் இன்னிங்கில் ஐந்து ஜாம்பவான்களின் விக்கெட்டுகளையும் இரண்டாம் இன்னிங்கில் ஆறு விக்கெட்டுகளையும் எடுத்து அபார சாதனை செய்தார். அவரது இணையற்ற சாதனை ஆஸ்திரேலிய வெற்றியில் அமுங்கிப் போய் விட்டது. என்ன செய்ய? அது தவிர ஒரு கஷ்டமான 'காட்ச்'சைப் பிடித்தும் அவர் முயற்சி பலன் அளிக்காமல் போனது துரதிர்ஷ்டம்தான்!

ஆனால் காப்டன் பட்டாடியின் தந்தை சீனியர் பட்டாடி தம் பிள்ளை தம்மைப் போலவே ஆஸ்திரேலியக் கோஷ்டிக்கெதிராகச் சதம்போட்டுவிட்டுவந்ததைவானுலகிலிருந்து கண்டு பூரிப்படைந்திருப்பார். காப்டன் பட்டாடி முதல் இன்னிங்கில் அபாரமாக ஆடியதைச் சென்னை ரஸிகர்கள் என்றும் மறக்க மாட்டார்கள். நாலா திசைகளிலும் பவுண்டரி பவுண்டரியாகக் காப்டன் பட்டாடி அடித்ததும் ஆஸ்திரேலிய வெற்றியில் இருந்த இடம் தெரியாமல் போய் விட்டதே! அவர்





ஆஸ்திரேலிய ஆட்டக்காரர்களுடன் கவர்னர்

மட்டும் என்ன? இரண்டாம் இன்னிங்ஸில் ஹனுமந்த்சிங் ஆபத்பாந்தவனாக நின்று 94 ரன்கள் எடுத்ததும் விழலுக்கு இறைத்த நீராகப் போய் விட்டது.

மூன்றாம் நாள் ஞாயிற்றுக்கிழமை நல்ல ஆட்டத்தை எதிர்பார்த்து மக்கள் நேருஜி ஸ்டேடியம் நிரம்பி வழியும்படி திரளாகக் குழுமியிருந்தனர். காப்டன் ஸிம்ஸன், 'ஸைக்காலஜி' தெரிந்தவர் போலும்! தம்மோடு ஆடிய பர்ஜிடம், 'இன்று கடுமையாக ஆட்டத்தை 'போர்' அடித்து விடுவோம்! மக்களும் தளர்ந்து விடுவார்கள். இந்தியக் கோஷ்டியினரும் அசந்து விடுவார்கள். அப்புறம் நாம் வைத்ததுதான் வரிசை!' என்று சொல்லி வைத்தார் போலும்! அவர்கள் 'போர்' அடித்து இந்தியக் கோஷ்டியைத் தளரச் செய்தனர். அதற்குப் பிறகு வந்த ஆஸ்திரேலிய ஆட்டக்காரர்கள் எல்லாவற்றுக்கும் வட்டியும் முதலுமாகச் சேர்த்து நான்காம் நாள் விக்கெட் விக்கெ ராகக் கிளப்பி ஆட்டத்துக்குத் திருப்பம் கொடுத்தனர். அதற்குப் பிறகு காப்டன் ஸிம்ஸன் பந்து வீச்சில் பல மாற்றங்களை அடிக்கடி ஏற்படுத்தி இந்தியக் கோஷ்டியைச் சிதற அடித்து விட்டார். ஆனால் காப்டனின் ஆட்டம் அவ்வளவாகச் சோபிக்கவில்லை. முதல் இன்னிங்ஸில் முதல் தடவையாக

இந்திய ஆட்டக்காரர்களுடன் கவர்னர்



டெஸ்ட் அனுபவம் பெறும் இந்திரஜித் சிங் அவரைக் குறைந்த எண்ணிக்கையில் 'ஸ்டம்பு அவுட்' செய்து அனுப்பி வைத்தார்.

யாரும் எதிர்பார்த்திராத புதிய அனுபவமும் சென்னை முதல் டெஸ்ட்டில் கிட்டியது. காப்டன் 'ஸிம்ப்ஸன்' 'அவுட்' என்று அம்பயர் இரண்டாம் இன்னிங்ஸில் கைதூக்கி விட்டார். இதைக்கண்ட மக்கள் ஆரவாரித்துக் கூச்சலிட்டுக் கொண்டிருக்கும் போதே அவர்கள் திகைப்பூண்டை மிதித்தவர்கள் போல் நிறுத்திவிட்டனர். அம்பயர் உயர்த்திய கை தணிந்து விட்டது. காப்டன் ஸிம்ஸன் அம்பயரை ஒரு ஏறு முறைத்தாரோ. அதன் பயனோ? அம்பயர் தாம் கொடுத்த வாக்கிலிருந்து பின்வாங்கி விட்டார்; தாம் எடுத்த முடிவிலிருந்து வெற்றிகரமாக அம்பயர் வாபஸ் வாங்கிக் கொண்டது இதுவரையில் எந்த டெஸ்டிலும் கண்டிராத அனுபவம்!

இதற்கு நன்றாகப் பழி தீர்த்துக்கொண்டு விட்டார் பந்து வீச்சு நிபுணர் துரானி. காப்டன் ஸிம்ப்ஸன் ஒரு தடவை பந்தை அடித்துவிட்டுத் தம் கோட்டை விட்டு வெளியே வந்து 'பராக்கு'ப் பார்த்துக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் கழுகுக்கு மூக்கில் வியர்த்த கதையாகத் துரானி இதைப் பயன்படுத்தி காப்டன் ஸிம்ஸனை மைதானத்தை விட்டு 'ரன் அவுட்' செய்து அனுப்பி விட்டார்! இதுவும் டெஸ்டில் அபூர்வ அனுபவமாகும்.

ஆஸ்திரேலிய கோஷ்டியில் கடைசி ஆட்டக்காரர் வரை நல்ல பாட்ஸ்மென்களாக இருந்தது அவர்கள் எண்ணிக்கையை உயர்த்த ஏதுவாயிற்று. பந்துவீச்சு நிபுணர்களான மார்ட்டினும், வீவர்ஸும் எத்தனை சீக்கிரத்தில் ஆட்டத்தில் 'போரி'லிருந்து மாற்றம் தந்து ரன்களைக் குவித்தனர்! அவர்கள் அடித்த சிக்ஸர்கள் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தன. மார்ட்டின் அடித்த இரண்டு சிக்ஸர்களும், வீவர்ஸின் மூன்று சிக்ஸர்களும் ஒன்றுக்குத்தரமா யிருந்தன. இந்த இரட்டையர்களது விரைவான எண்ணிக்கையே ஆஸ்திரேலியக் கோஷ்டியின் வெற்றிக்குப் பாலம் அமைத்தது.

சென்னையில் சென்ற தடவை வந்த பாகிஸ்தான், இங்கிலாந்து கிரிக்கெட் கோஷ்டிகள் விஜயத்தின்போது ஆட்டம் விறுவிறுப்பில்லாமல் வெற்றி தோல்வியின்றி முடிந்தது. இந்தத் தடவை கிரிக்கெட் ஆட்டத்துக்கு ஒரு முடிவும், கிரிக்கெட் ரசிகர்களுக்கு நல்ல விருந்தும் கிடைத்தன. இதுசென்னை ரசிகர்கள்செய்தபாக்கியம்தான். இந்தத்தடவை எந்த விதமான குந்தகமும் நேராமல் ஐந்து நாட்களும் ஆட்டத்தை நிர்வகித்த சென்னை கிரிக்கெட் சங்கம் கிரிக்கெட் ரசிகர்களின் பாராட்டுக்குரியது. ஆட்டத்தில் வெற்றி தோல்வி ஏற்படுவது சகஜம். ஆனால் நல்லதோர் ஆட்டத்தை ரசிகர்களுக்கு வழங்குவது அபூர்வமான காரியம். இந்த அபூர்வ காரியத்தைச் செய்த ஆஸ்திரேலிய, இந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குச் சென்னை ரசிகர்கள் மனமுவந்த பாராட்டுதல்களை வாரி வழங்கத் தயங்க மாட்டார்கள். — குண்டுமணி

விக்ஸிலிருந்து புதிய சக்திவாய்ந்த இருமல் மருந்து

# அடமுள்ள இருமலை நிறுத்துகிறது

## இருமல் ஆரம்பமாகும் இடத்தில் செயல்புரிகிறது...இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்







எரிச்சலைக் கொடுக்கும், தூக்கத்தைக் கெடுக்கும் இருமலினால் நீங்கள் அவதிப்படவேண்டாம். இருமல் உங்கள் தொண்டையில் மட்டும் இருப்பதல்ல என்பது மருத்துவ விஞ்ஞானம் இப்போது அறிந்த விஷயம். உண்மையில், இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்தான் உங்கள் இருமல் அடங்கியிருக்கிறது. தொண்டை அழற்சி, சுவாசக் குழாய் அடைப்பு ஆகியவைகள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தைத் தூண்ட, நீங்கள் இரும ஆரம்பிக்கிறீர்கள்.

இருமலை நிறுத்துவதற்கு இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரம் அமைதியடைய வேண்டியது அவசியம். விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள பிரத்தியேகமான "இருமல் சமனிகள்" உங்கள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தை விரைவில் அடைந்து, அதை சீக்கிரமே சமனப்படுத்த இருமல் நிற்கிறது.

அதேநேரத்தில், விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள சக்தி வாய்ந்த மருந்துகள் தீவிரமாக வேலை செய்து, அடைபட்டுள்ள சுவாசக் குழாயைத் திறந்து, வலிமிக்க மார்பு இறுக்கத்தை நீக்கி, தொண்டை எரிச்சலைப் போக்குகிறது.

விக்ஸ் பார்முலா 44 உங்களுக்கு இருமலிலிருந்து அற்புதமான நிவாரணத்தை அளிக்கிறது ... அடங்காத இருமலிலிருந்து விடுதலை பெற்று, நீங்கள் இரவு முழுவதும் சுகமாகத் தூங்குகிறீர்கள்.

**உங்கள் மார்பில் செயல்புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள விசேஷ கூட்டுப் பொருள்கள் உங்கள் சுவாசக் குழாய்களில் ஆழ்ந்து வேலை செய்து வலிமிக்க மார்பு இறுக்கத்தை நீக்குகிறது.

**உங்கள் தொண்டையில் செயல்புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44 இருமலினால் தொண்டையினுள் ஏற்படும் வெடிப்புகளைத் தீவிரமாகக் குணப்படுத்துகிறது. தொண்டை அழற்சியை உடனடியாகச் சமனப்படுத்துகிறது.

**உட்கொள்ளும் அளவு**

உட்கொள்ளும் சரியான அளவை அட்டைபெட்டியின் மேல் உள்ள விபரங்களைத் தவறாது படியுங்கள்.




# விக்ஸ் பார்முலா 44

காஃப் மிக்ஸ்சர் இருமல் ஆரம்பமாகுமிடத்தில் செயல்புரிகிறது

# கிரிக்கெட் நிலைமை...


அடேய்! கொண்டா அந்த மாலையை!
ஏன்? நீங்கள் போடவா?
பட் போடி 'FOUR' 'FOUR' ஆக அடித்துச் சதம் எடுத்தார் நாம் என்ன அடிக்கலாம்?
போர் அடிக்கலாம்
கர்...ர் கர்-ரொஸ்-விட்...
தூங்குகிறவர் பெயர் அவர் அட்டையிலே இருக்கிறது!
மார்ட்டின் டீ அருந்துகிறார்!!
மானேஜர் அறிக்கைக்கு குறிப்பு எழுதுகிறார்....
"நம்முடைய கிரிக்கெட் காரர்கள் சரிவர போரடித்து வருகிறார்கள். அவர்களைப் பற்றிக் கவலைப் படவேண்டாம்...."
ஸ்நானம், மாளயத்தை உத்தேசித்தா?
சபாஷ்!

அது 'அசிராய நிலைமை' தலை போய்
வால் ஆடும் நிலைமை ஏற்பட்டது!

பந்தும் பழசாகிப் புதுசாகிப்
பல உருவம் எடுத்து அங்குமிங்கும்,
எங்கும் சிக்சராக ஆகாயத்தில்
பறந்த வண்ணமிருந்தது.....
சிக்சரும் பவுண்டரியுமாகக்
கலந்து மிக்சராகஅடித்தனர்.

நட்கர்ணியைக் கண்டால்
நடுங்கியவர் நட்கர்ணியையே
நடுங்க வைத்தார்!





.....ஆகாயத்தில் பறந்த
விமானப் பிரயாணிகள் கூட
'அப்பா! பார்த்து ஓட்டு, யாரோ
சிக்சர் அடிச்சிண்டிருக்கா!' என்று
அபாயக் குரல் எழுப்பி இருக்கலாம்!
------------------------ அப்படியிருக்க, கிருபால் கோட்டைவிட்ட
'செண்டர் ஸ்டம்ப்' இன்னும் பறந்திண்டிருக்கிறதாகவதந்தி.



தான் கோட்டை விட்டும் சிம்சன்
ஆட்டத்தைக் கோட்டை
விடவில்லை!

மீண்டும் மாதவனூர்
கடிதாசு எழுதினார் :-
'போரடித்தவர்கள்
போரை'யே சிக்சரடித்து,
வெற்றியும் கொண்டு
விட்டார்கள்.

பதினைந்தாம் அத்தியாயம்

## புலவனின் கதி?

பைந்தமிழ்க் குமரனுடைய பாடல்கள் சக்கரவர்த்திக்குக் கொடுத்த வேதனையைவிட இளவரசனின் குறுக்கீடுதான் குலோத்துங்கருக்குத் தலை இறக்கம் தந்துவிட்டது. தலை இருக்கும் போது வால் ஆடலாமா? தந்தை அமைதியாக இருக்கும்போது மைந்தனுக்கு ஏன் இந்த ஆவேசம்? விருந்தினர்களுக்கு முன்னிலையில் இப்படிப் பண்பும் கட்டுப்பாடுமின்றி நடந்து கொண்டால், அவர்கள் என்ன நினைப்பார்கள்?

'தந்தையின் சொல்லைக் காப்பாற்றத் தனயன் முடி துறந்து பதினான்கு ஆண்டுகள் கானகம் சென்ற கதையைக் கம்பர் இந்த நாட்டிலிருந்து கொண்டு எப்படித்தான் எழுதினாரோ!' என வியப்படைந்தாள் பாமினி. வீரநரசிம்மனுக்கு அப்போதே இராஜராஜனின் தலைமையில் நடக்கப் போகும் எதிர்காலத்து ஆட்சியில் சந்தேகம் வந்து விட்டது. தந்தைக்கோ, தலைவருக்கோ கட்டுப்படாதவன், தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தப் பழகாதவன்,— எங்ஙனம் இந்த மாபெரும் சாம்ராஜ்யத்தைக் கட்டியாளப் போகிறான்?

இராஜராஜனின் இந்தக் குறுக்கீடு நாளுக்கு நாள் ஆட்சிப் பொறுப்பு நடவடிக்கைகளிலும் மிகுந்துகொண்டே வந்தது. பொறுப்பு முழுவதையுமே சக்கரவர்த்தி அவனிடம் கொடுத்து விடச் சித்தமாக இருந்தார். கடமைகளை உணராதவனிடம், அவற்றுக்ாகத் தன்னைப் பழக்கிக் கொள்ள விரும்பாதவனிடம், முயற்சிகள் செய்யாதவனிடம், உழைத்துத் தேறாதவனிடம் எப்படிப் பொறுப்பைக் கொடுப்பது? நாடாள்வது என்பது தன்னடக்க மற்றவர்கள் செய்யக் கூடிய வேடிக்கை விளையாட்டல்லவே!

# கயல்விழி



குலோத்துங்கருக்கு இப்போது தம் கௌரவத்தையும் தம் வாரிசின் மதிப்பையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் வந்து விட்டது.

''இராஜராஜா!'' என்று மெல்லிய குரலில் அவனை அன்போடு அழைத்தார். கண்களால் அவனுக்கு, 'நான் சொல்வதைக் கேட்டுக் கொள்: எதிர்த்துப் பேசாதே!' என்பது போல் கட்டளை யிட்டார். பிறகு கூறினார்: ''சோழ சாம்ராஜ்யத்தின் மீது உனக்குள்ள ஆழ்ந்த பற்றுதல் ஆவேசமாக மாறி வருகிறது. சாம்ராஜ்யத்து வீரர்களில் யாருமே இப்படி நடந்து கொண்டிருக்க மாட்டார்கள் என்று மெய்யாகவே நீ நம்புகிறாய். யாரோ கூறிய புனைந்துரையைக் கேட்டுக் கவிஞர் உணர்ச்சி வயப்பட்டுப் பாடியிருக்கலாம். அது கவிஞரின் தவறல்லவே? அதற்காக நமது அழைப்பில் வந்திருக்கும் அவர் மீது சினங் கொள்ளலாமா?''

சாதுரியமான மொழிகளைக் கூறி நிலைமையைச் சீர் செய்ய முயன்றார் சக்கரவர்த்தி.

''தயைசெய்து சக்கரவர்த்திகள் என்னை மன்னித்தருள வேண்டும்'' என்றான் பைந்தமிழ்க் குமரன், ''இது புனைந்துரையல்ல. பல நிகழ்ச்சிகள் இப்படி நடந்திருக்கின்றன. அதில் ஒன்றுதான் இந்தக் கற்பனைக்கு வித்து. மேலும் பொய்ம்மைக்கு உள்ளொளி பாய்ச்சும் தன்மை கிடையாது. சத்தியத்தின் கையில் நான் ஒரு கருவியாக இருந்து இதைப் பாடியுள்ளேன்.''

"நிகழ்ச்சி மெய்யாகவே இருந்து விட்டால்தான் என்ன?" என்று கேட்ட குலோத்துங்கர், "போர்க் காலங்களில் இப்படியெல்லாம் தவறுகள் நடைபெறுவது இயல்புதான்" என்றார்.

"முற் காலத்திலேயே பாரதப் போரிலும் பல அதர்மமான போர் முறைகள் கையாளப்பெற்றிருக்கின்றன. அவை யெல்லாம் போரின் வெற்றிக் காக நடைபெற்ற அதர்மங்கள். ஆனால் பாண்டிய நாட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளுக்கும் போருக்கும் சிறிது கூடத் தொடர்பில்லை. இராவணன் கூடச் சீதையைப் பின் தொடர்ந்து சென்றானே தவிர, அழிக்கத் துணியவில்லை" என்றான் பைந்தமிழ்க் குமரன்.

'பாண்டியக் கண்டனன்' என்று விருதுப் பெயர் சூடிக் கொண்டிருக்கும் வீர நரசிம்மனுக்கும் இந்த உண்மைகள் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காகவே, தனக்கு அதனால் வரக் கூடிய இன்னல்களையும் பொருட்படுத்தாது, அவன் மெய் கூறி வாதிட்டான். போர்களும் சரி, அதன் வெற்றி தோல்விகளும் சரி, முதலில் மனிதர்களின் சிந்தனைகளில் உருவாகின் றன என்பதை அவனும் உணர்ந்தவன்.

"புலவர்கள் குறுகிய நாட்டுப் பற்றுக் கொண்டவர்களாக இருப்பதை விட, உலகத்துக்கே உரிய பரந்த பண்பு கொண்டவர்களாக இருப்பதே மேல். பாண்டிய நாட்டுப் புலவராகிய உங்களை அழைத்துக் கோசல சாம்ராஜ்யத்து வருங்காலச் சக்கரவர்த்திகளின் முன்பு சோழ சாம்ராஜ்யம் இப்போது பாடச் செய்திருக்கிறது" என்றார் குலோத்துங்கர்.

"இந்தப் பரந்த பண்புக்காக நான் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். ஆனால் என் கவிதையும் குறுகிய நோக்கம் கொண்டதல்ல. உலகில் எங்குமே இது போன்ற தீமைகள் நிகழக்



கூடாது என்று பொதுவான பண்பு நீக்கவே பாடினேன்.'

''இளம் புலவர் வாதத் திறமையிலும் வல்லவராக இருக்கிறார்'' என்று கூறி நகைத்தார் சக்கரவர்த்தி. ''கவிஞரே! உங்களைச் சோழ நாட்டிலேயே தங்கச் செய்து கௌரவிக்க வேண்டுமென்ற ஆவலால்தான் இங்கு வரவழைத்திருக்கிறேன். என் காலத்துப் புலவர்கள் என்போல் வயதிலும் முதிர்ந்தவர்கள். வருங்காலத்தில் ராஜ ராஜனுடைய சபையை அலங்கரிக்கும் வகையில் உங்கள் நட்பு வளர வேண்டும். இளவரசனோடு நீங்கள் வள்ளுவரின் பொருளதிகாரத்தையும் கம்பர் கவி இன்பத்தையும் அளவளாவி மகிழலாம். கம்பரை நீங்கள் இருவருமே கற்றுச் சுவைக்கலாமே!''

குலோத்துங்கர் ஓர் அம்பெய்து இரு பறவைகளை வீழ்த்தலாம் என்று முன்பே திட்டமிட்டிருந்தார். புலவனைப் பாண்டிய நாட்டிலிருந்து வெளியேற்றுவதோடு அவனைத் தம்முடைய குமாரனுடன் பழக விட்டு அவனை ஆட்சிப் பொறுப்புக்காகப் பழக்க வேண்டும் என்பதும் அவர் எண்ணம். வள்ளுவரின் பொருளதிகாரம் பயின்று அதன்படி நடந்தால் எந்த நாட்டையும் கட்டிக் காத்து ஆட்சி செய்து விடலாமே!

''எனக்கு அது மிகப் பெரிய வாய்ப்பு. ஆனால் புலவர்களின் எண்ணங்கள் நிறைவேறுவது அவர்களைப் பாராட்டும் தன்மையையும் பொறுத்திருக்கிறது. எந்தக் கணத்தில் நான் என் உயிரை இழக்க நேரிடுமோ என்ற அச்சத்தோடுதான் இளவரசரோடு அளவளாவ வேண்டும்.''

தன்னுடைய சிரிப்பை அடக்கிக் கொண்டாள் பாமினி. அச்சமென்பது அணுவளவாவது இருந்தால் இப்படித் துணிவுடன் கவிஞன் பேசியிருக்க மாட்டான் என்பது அவளுக்குத் தெரியும். 'கவிப் பழக்கமோ கற்பனைகளைப் படித்து இன்புறும் தகுதியோ இல்லாத நெடுமரம் இந்த இளவரசன் என்பதை எவ்வளவு அழகாகக் கூறுகிறார்!'

சக்கரவர்த்திக்குமே அது சுருக்கென்று தைத்தது. சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, ''சரி, நாம் மீண்டும் சந்திப்போம்!'' என்று அவனுக்கு விடை கொடுத்து அனுப்பினார். புலவன் வெளியேறுவதற்குக் காத்துக் கொண்டிருந்தவனைப் போல் அதை அடுத்து இராஜ ராஜனும் அங்கிருந்து கிளம்பினான். இராஜராஜன் ஏதாவது தன்னிச்சையாகச் செய்துவிடக் கூடும் என்ற உறுத்தலும் அவருக்கு எழுந்தது. ஆனாலும் அவரால் தடுக்க முடியாது. அவன் அவரை மீறிப் போய்க் கொண்டிருந்தான்.

''இந்த இளைஞன் ஒரு பயங்கரமான புரட்சிக்காரன்'' என்று வீர நரசிம்மனிடம் தொடங்கினார் சக்கரவர்த்தி. பாண்டிய நாட்டில் அவன் செய்து வந்த செயல்களை மிகைப் படுத்திக் கூறிவிட்டு, ''பாண்டிய நாட்டு மக்களையே நம்மீது திருப்பி விடக் கூடிய ஆற்றல் பெற்றவன்; தங்களுடைய விருதுப் பெயரைக் கேட்ட பிறகுதான் அவனுக்கு நம்முடைய உறவும் ஆற்றலும் விளங்கி யிருக்கும்'' என்றார்.

வீரநரசிம்மனால் இப்போது குலோத்துங்கரைப் புரிந்து கொள்ள முடிந்தது.

அன்றைக்கு இரவில் பாமினிக்குத் தன் தந்தையுடன் தனித்துப் பேசுவதற்குச் சிறிது பொழுது கிடைத்தது. ''இங்கு வந்ததிலிருந்து சக்கரவர்த்திகளின் பெருந் தேவியாரும் மற்ற அரண்மனைப் பெண்டிரும் பேசுவதைப் பார்த்தால் எனக்கொரு சந்தேகம் எழுகிறது'' என்றாள்.

''என்ன?''

''இந்த நாட்டுச் சிம்மாசனத்தில் நான்தான் வருங்காலத்தில் இளவரசரோடு உட்காரப் போகிறவள் போல் பேசிக் கொள்கிறார்கள். அரண்மனையில் மற்றப் பெண்டிர்கள் பேசுவதோடு நிற்கவில்லை. இளவரசரை மணந்து கொண்டவரே என்னைத் தமக்குத் தங்கையாக வந்து விடும்படி வற்புறுத்துகிறார்!''

குலோத்துங்கர் தம்முடைய இராஜதந்திர வலையை அந்தப்புரத்துக்குள்ளும் அழகாகத்தான் விரித்து வைத்திருக்கிறார் என்பதைப் புரிந்துகொண்டார் நரசிம்மன்.

''அதனாலென்ன? நம்முடைய உறவும் சாம்ராஜ்ய உறவும் ஒன்றாக வளர்வது நல்லதுதானே! நடக்கப் போவது எதுவோ, அதைக் கூறிப் பரிகாசம் செய்கிறார்கள் பெண்கள்.''

''நடக்கப் போவதா?'' விழிகளை உருட்டி விழித்தாள் பாமினி. ''உண்மையாகவே நம்புகிறீர்களா?''

அவர் நம்பவில்லை. யோசனையில் தீவிரமாக ஆழ்ந்து விட்டார். பிறகு வேறு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவர் போல், ''அவர்களிடம் மறுத்துப் பேசி அவர்கள் மனத்தை இப்போது நீ புண்

telin

டெலின்

விரல் நுனியில்
நிர்வாக
மேற்பார்வை




செயல் முறைக்கு
எழுதிக் கேட்கவும்

விரலால் தொட்ட
மாத்திரத்திலேயே
தொலைவிலிருக்கும்
உங்கள் நிர்வாகத்துடன்
நீங்கள் தொடர்பு
வைத்துக் கொள்ளலாம்

தயாரிப்பாளர்கள்: எலக்ட்ரானிக் அப்ளையன்ஸஸ் பிரைவேட் லிட்.
புது டில்லி - 3

சென்னை, பாண்டிச்சேரி, மைசூர் மற்றும் ஆந்திர ராஜ்யங்களுக்கு
பிரத்யேக விநியோகஸ்தர்கள்

**டிரக்ஸிமா வொர்ல்டு ஒய்டு**

தலைமை ஆபீஸ்:
6/108 - C, மவுண்டு ரோடு
தேனாம்பேட்டை, மதராஸ்-18
போன்: 74554 - தந்தி: 'TREXWORLD'

கிளை ஆபீஸ்:
43/2E, சென்ட்ரல் தெரு
பெங்களூர் - 1
தந்தி: 'TREXWORLD'

கேரள ராஜ்யத்துக்கு பிரத்யேக விநியோகஸ்தர்கள்:

**பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன்**

தலைமை ஆபீஸ்:
தபால் பெட்டி எண் 7
செங்கனாச்சேரி, கேரளம்

ஷோ - ரூம்:
K. K. ரோடு
கோட்டயம்

NAS 2170




தென் இந்தியாவுக்கு ஸப் ஏஜண்டுகள் :
ஹிந்துஸ்தான் டீலர்ஸ் லிமிடெட்
கெம்பகௌடா ரோடு, பெங்களூர்-9
4, ஸ்டிரிங்கர் தெரு, சென்னை-1

ஹைதராபாத்துக்கு ஸப் ஏஜண்டுகள் :
ரங்டா & கம்பெனி
நாஸ் பில்டிங்
பத்தர்கட்டி, ஹைதராபாத்

படுத்த வேண்டாம்; நானும் உன் விருப்பத்துக்கெதிராக உன்னை வற்புறுத்தவில்லை; இது இரகசியமாக இருக்கட்டும்'' என்றார்.

அன்று இரவெல்லாம் ஒரே இன்பக் கனவுகளில் இளைத்துக் கொண்டிருந்தாள் பாமினி. இராஜ ராஜனைப் பற்றி அவள் தந்தை ஒரு முடிவுக்கு வந்து விட்டதில் அவளுக்கு அளவற்ற ஆனந்தம். சோழ சாம்ராஜ்யத்துக்கு வந்து ஒருசில தினங்களுக்குள்ளாகவே அவள் அவனைப் புரிந்து கொண்டு விட்டாள். நாற்பது வயதாகிய அவள் தந்தை அவருடைய தந்தையாகிய வல்லாள தேவரிடம் இன்னும் எவ்வளவு அன்போடு, பயபக்தியோடு நடந்துகொள்கிறார்! இராஜராஜனோ?...

வீரநரசிம்மருக்குமே அவனைப் பற்றி உயர்வான எண்ணம் ஏற்படவில்லை என்பதை நன்கு கண்டு கொண்டாள் கோசல நாட்டு இளவரசி. கூண்டுக்குள்ளிருந்து விடுபட்ட வண்ணக்கிளியின் பரவச உணர்ச்சி அவளுக்கு.

முதல் நாள் இரவே புலவன் தங்கியிருந்த மாளிகையைப் பார்த்து வைத்திருந்தாள் பாமினி. மேல் மாடத்திலிருந்து பார்த்தால் அது நன்கு தெரிந்தது. பொழுது புலர்ந்தவுடன் காலைக் கதிரொளியில் உலவ விரும்பியவள் போல் அவள் மாடத்தின் சுவர் ஓரமாக நடை பயின்று கொண்டிருந்தாள். விழிகள் புலவனின் மாளிகைப் பக்கம் அடிக்கடி திரும்பின.

அப்போது புலவனின் மாளிகையில் ஒரு திடுக்கிடத் தக்க நிகழ்ச்சி நடந்தது. அதைக் கண்டு பதறினள் பாமினி.

மாளிகையின் வாயிற் கதவோரமாக வேல் தாங்கி நின்ற இரு வீரர்கள் புலவன் வெளியில் வந்தபோது தங்கள் வேல்களைக் குறுக்கே நீட்டி அவனை வழி மறித்து நிறுத்தினார்கள். புலவன் அவர்களிடம் ஏதோ வாதிட்டுப் பார்த்தான். பலனில்லை. அவர்கள் அவனை வெளியில் விட மறுத்து விட்டனர்.

புலவனுக்கு இனி அது மாளிகையில்லை; சிறைச்சாலை; பாமினிக்கு எல்லாமே விளங்கிவிட்டது. ஆயிரமாயிரம் எண்ணங்கள் அவளிடம் அந்த ஒரு விநாடியில் அலை மோதின. எந்த எண்ணத்தின்படியும் அவளால் அவனுக்கு உதவ முடியாது போல் தோன்றியது. அவள் விருந்தினராக வந்தவள். அவள் தந்தையோ பிறர் நாட்டு நடப்புக்களில் தலையிட மாட்டார். அவள் தலையிட்டாலும் அவர் வருந்துவார். — புலவனின் கதி?

## பதினோரும் அத்தியாயம்

# கூண்டில் நுழைந்த கிளி

பாமினிக்குப் பைந்தமிழ்க்குமரனின் நிலை விளங்கி விட்டது. கவி பாடும் குயிலைக் கூண்டுக்குள் அடைத்துவிட்டார்கள். அது தன்னிச்சையாக வெளியில் பறந்து செல்ல முடியாதபடி கட்டுக் காவலும் ஏற்படுத்தி விட்டார்கள். அரச குலத்தில் பிறந்து வளர்ந்த பாமினிக்கு, வீணாக உணர்ச்சி வயப்பட்டுப் புலவனிடம் அநுதாபம் கொள்வதால் ஏற்படும் அபாயங்கள் நன்கு தெரிந்திருந்தன. ஆகவே அவள் அவசரத்தில் எதையும் செய்ய முற்படவில்லை.

பிறர் அறியாதவாறு அந்த மாளிகையைக் கண்காணித்து வந்தாள். ஒவ்வொரு நாள் இரவுப் பொழுதும் கழிவதுதான் வேதனையைத் தந்தது. இரவில் ஏதேனும் புலவனுக்குத் தீங்கு நேர்ந்து விட்டால்? பொழுது விடிந்த பின்னர் அவனுடைய தோற்றத்தைச் சாளரத்தின் அருகில் கண்டபோது தான் அவளுடைய உயிர் அவளிடம் திரும்பி வந்தது.

புலவன் சிறைப்பட்டிருக்கும் செய்தி வெளியில் தெரியாதபடி காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. பணியாட்கள், உணவு கொண்டு செல்வோர், காவலர்கள் முதலியோர் காலம் தவறாது அங்கு சென்றனர். உபசாரங்கள் குறைவில்லாமல் அவனுக்கு அங்கு நடைபெற்று வந்தன. அவனை மட்டிலும் வெளியில் காண முடியவில்லை.

சாளரங்களைத் தவிர எல்லாக் கதவுகளும் பெரும்பொழுது மூடிக் கிடந்தன.

வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்த பாமினி ஒரு நாள் மாலையில் தனித்து வெளிப்புறத்தில் உலவ முற்பட்டாள். எதேச்சையாக அங்கு வந்தவள் போல் மாளிகையின் படிகளில் ஏறி உள்ளே வந்தாள். காவலர்கள் ஏது செய்வதென்று தெரியாது தவித்தார்கள். அவளுக்காகக் கதவைத் திறந்து விடவும் அவர்களுக்குத் துணிவில்லை; அவளுக்கு மறுப்புச் சொல்லவும் நா எழவில்லை.

"புலவர் தனிமையில் இருந்து கம்பரின் கவியை ஆராய்ந்து வருகிறார். அதனால்தான்...."

"அதனால்தான் நான் அவரைக் காண விரும்புகிறேன். அவரை நான் வெளியில் செல்ல அனுமதித்து விடமாட்டேன்!" என்று நகைத்தவாறே கூறிக் கொண்டு வாயிற் கதவைத் தள்ளித் திறந்தாள் பாமினி. காவலர்கள் அவளைத் தடுக்கவில்லை. அவர்களில் ஒருவன் அடுத்தவனை எச்சரித்துவிட்டு எங்கோ விரைந்து சென்றான்.

உள்ளே ஆசனத்தில் அமர்ந்தவாறே கம்பரின் கவிச்சுவையில் மூழ்கி வாய் விட்டுப் பாடிக் கொண்டிருந்த பைந் தமிழ்க் குமரனுக்கு வேறெந்த நினைவுமில்லை. கதவைத் திறந்த சத்தமோ உள்ளே இளவரசி நுழைந்ததோ அவனுக்குத் தெரியாது. புலவனைக் கவனித்தாள் பாமினி. அவன் உடலில் இளைப்போ, முகத்தில் சோர்வோ தென்படவில்லை. தான் சிறைப்பட்டவன் என்ற உணர்வே இல்லாதவன் போல் அவன் அனுபவித்துப் பாடிக் கொண்டிருந்தான். மாளிகைக்குள் குபீரென்று எழுந்த முல்லை மணமும், சண்பக மணமும் அவனது இதயத்தில் புகுந்ததென்றாலும், எங்கிருந்து மணம் வருகிறது என்று அவன் நினைத்துப் பார்க்கவில்லை.

மெல்லிய குரலில் தனக்குத் தானே பாடி இன்புற்றுக் கொண்டிருந்தான்.

" கானில் உயர் கற்பகம்
உயிர்த்த கதிர்வல்லி
மேனி நனிபெற்று
விளைகாமம் நிறைவாசத்
தேனின் மொழியுற்
றினிய செவ்வி நனிபெற்றோர்
மானின் விழிபெற்று
மயில் வந்ததென வந்தாள்!"

'கலீர்' என்று ஒரு சிரிப்பொலி எழவே தலைதூக்கிப் பார்த்தான் செந்தமிழ்க் குமரன்.

"நான் வருவது என்ன, பஞ்சவடியில் வஞ்சமகள் வருவது போலவா இருக்கிறது? சூர்ப்பனகையின் வரவைப் பாடுகிறீர்களே...!"

"மன்னிக்க வேண்டும் இளவரசி!" என்று உண்மையாகவே பதற்றமடைந்து கூறினான் இளைஞன். "தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள். தங்கள் வரவை நான் கவனியாது இருந்து விட்டேன்."

தான் செய்யாத ஒரு தவறுதலுக்கு அவன் மெய்யாகவே வருந்தினான். அவனுடைய மனப் பண்பு அவளுக்கு மகிழ்ச்சியூட்டியது. புலவனுக்கோ கன்னட நாட்டுப் பெண்மணிக்குக் கம்பரிடம் இவ்வளவு ஈடுபாடு இருந்தது அதிசயமாகத் தோன்றியது.

"கம்பரால் வஞ்ச மகளைக் கூட அழகுணர்ச்சியோடுதான் வர்ணிக்க முடிகிறது இல்லையா? "வஞ்சமகளை அறிமுகப்படுத்தும் போதுகூட அவர் கரத்தில் தமிழ் கொஞ்சி விளையாடுகிறது; மானும் மயிலுமாக வந்து துள்ளிக் களிக்கிறது; தேனருவியாய்ப் பொங்குகிறது."

புலவனுக்கு அந்த இளம் நங்கையின் ஆர்வம் குதூகலத்தைக் கொடுத்தது. கம்பரின் கவியின்பமே பெண்ணுருக் கொண்டு அங்கு வந்திருப்பது போன்ற பிரமை அவனுக்கு. தான் படித்துக் கொண்டிருந்த சுவடியைக் கட்டி ஒரு புறம் வைத்தான். அடுத்தாற்போல் இருந்த ஆசனத்தில் துவண்டு விழும் முல்லைக் கொடியெனச் சரிந்தவாறே அமர்ந்திருந்தாள் அவள்.

பொதுவாக அவனிடம் பேசிவிட்டு, "ஆமாம், மாளிகையைச் சுற்றிலும் கட்டுக் காவல் மிகுந்திருக்கிறதே, என்ன விஷயம்?" என்று திடீரென்று கேட்டாள்.

"அப்படியா? எனக்குத் தெரியாதே!" என்று அவளைப் போலவே ஏதுமறியாதவன்போல் பதில் அளித்தான். "ஒரு வேளை நான் பாண்டிய நாட்டுக் கவிஞன் என்பதால் என்னை மிகவும் பத்திரமாகப் பாதுகாத்து வருகிறார்கள் போலிருக்கிறது!"

கவலையோ கலக்கமோ இல்லாமல் எப்படி இவரால் கலகலப்பாகப் பேச முடிகிறது? அவள் மேலும் அவனுடைய செருக்குடன் விளையாட நினைத்தாள்.

"ஓ! தங்களைக் கண்ணே போல் காக்கும் கண்ணிமைகளாக அவர்கள் நடந்து கொள்ளுகிறார்கள் போலிருக்கிறது. அதனால்தான் கண்ணிமைகளைப் போன்ற இந்த மாளிகைக் கதவுகள் தாங்கள் உள்ளேயிருக்கும்போதே மூடிக் கொண்டிருக்கின்றன."

"புலவனின் தனிமைக்கு இடையூறு விளைவிக்கக் கூடாதல்லவா? கம்பரின் ஏட்டுப் பிரதி ஒன்று கேட்டேன். அனுப்பி உதவியிருக்கிறார்கள். கவிஞருக்கும் எனக்கும் இடையே யாரும் குறுக்கிடக் கூடாதென்ற கவலை அவர்களுக்கு."

"நான் குறுக்கிட்டு விட்டேன் போலும்!"

''அது என் பாக்கியம்'' என்றான் கவிஞன். ''ஆனால் தங்களுக்கு எப்படி அநுமதி கிடைத்ததென்றுதான் எனக்கு விளங்கவில்லை.''

''கேட்கவில்லை; எடுத்துக் கொண்டு விட்டேன்.'' முத்துப் பல் வரிசை பளிச்சிட இளநகை புரிந்தாள் பாமினி. பின்னர் சற்றே தயங்கிவிட்டு, ''தங்களிடம் என் பாராட்டைத் தெரிவித்துத் தங்களிடம் ஒரு வேண்டுகோள் விடுத்துச் செல்லலாமென்றுதான் இங்கே வந்தேன்'' என்றாள்.

''வேண்டுகோள் எதற்கு? கட்டளையிடலாம்'' என்றான் புலவன்.

''தாங்கள் பாடிய கூத்துப் பாடல் என் உள்ளத்தை உருக்கி விட்டது. உலகத்துப் பெண் குலத்தின் துயரம் முழுவதையுமே அதில் பிழிந்து கொடுத்துக் கேட்போரின் உள்ளத்தைப் பிழிந்து துயரம் பெருகச் செய்து விட்டீர்கள். அரண்மனைப் பெண்டிருக்கே கூட இந்தத் துன்பம் நேராது என்பது என்ன நிச்சயம்?''

''போர் என்றாலும் அதில் ஒரு நெறி வேண்டும்.''

''தங்களுடைய பாடலைக் கூத்தாகவும் நடிப்பதாகக் கூறினீர்களே, அந்தக் கூத்து எப்போதாவது எங்கள் தலைநகரத்தில் நடக்கச் செய்தால் நலமாக இருக்கும். அதோடு தாங்களும் ஒருமுறை துவாரசமுத்திரத்துக்கு வந்தால் நானும் தந்தையாரும் பெரு மகிழ்ச்சி யடைவோம்.''

''தங்கள் அன்புக்கும் அழைப்புக்கும் மிகுந்த நன்றி'' என்று உளம் கனிந்த நன்றிப் பெருக்கோடு கூறினான் பைந்தமிழ்க் குமரன். ''இன் சுவையும் நளினமும் நிறைந்த நடனங்களைத்தான் தாங்கள் பெரும்பாலும் கண்டு களித்திருப்பீர்கள். இந்த வகைக் கூத்துக்கள் தமிழகத்தின் பழமையைச் சார்ந்தவை. கொற்றவைத் தெய்வத்துக்கேற்ற ஆவேச நடனங்கள். இவற்றைப் பிற நாட்டு மக்கள் எந்த அளவுக்கு ரசிப்பார்களென்று கூற முடியாது.''

''தங்கள் பாடலிலும்தான் இன் சுவைக்கும் நளினத்துக்கும் குறைவில்லையே!'' என்று கூறியவாறு அவனுடைய விழிகளை நாணத்தோடு நோக்கினாள் பாமினி. அவள் முகம் சிவந்தது. ''கட்டாயம் இந்த அழைப்பைத் தாங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். எங்கள் நாட்டில் இதைப்போன்ற உபசாரங்கள் தங்களுக்குக் கிடைக்காதென்று தாங்கள் உறுதியாக நம்பலாம். கண்ணே போல் போற்றிக் கதவுகளைத் தாழிட்டுச் சிறையிட மாட்டோம்!''

கலீரென்று சிரித்து விட்டான் பைந்தமிழ்க் குமரன்.

''தங்கள் அழைப்பை ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் தாங்கள் இந்த அழைப்பை நான் சிறைப்பட்டிருக்கும் போது தருகிறீர்கள்.''

பாமினியின் கண்கள் கலக்கமுற்றன.

''தங்களை இனி என்ன செய்வார்கள்?'' என்று கெஞ்சுவது போல் அவனிடம் கேட்டாள் பாமினி.

''ஏதுமே எனக்குத் தெரியவில்லை. விருந்தினர்களாகிய தங்கள் தந்தையாரும் தாங்களும் இங்கு இருக்கும் வரையிலும் எனக்கு இந்த மாளிகை வாசம் உண்டு. உபசாரங்களும் நடைபெறும். பிறகு என்ன நேருமென்று கூற இயலாது. அது இளவரசரின் சித்தத்தைப் பொறுத்தது. பாதாளச் சிறைக்குள் காற்றும் கதிரொளியுமே புகுவதற்கு அஞ்சுமென நினைக்கிறேன்.''

''பாதாளச் சிறையா?'' — உள்ளங்கால் முதல் உச்சி வரையிலும் ஒரு மின்னல் ஊடுருவியது போலிருந்தது, பாமினிக்கு.

''இன்னொரு வேண்டுகோள்.....''

''என்ன?'' என்றான்.

''தங்களைச் சிறை மீட்க என்னால் ஏதும் முடியும் என்று தாங்கள் கருதினால் அதைப் போன்ற மகிழ்ச்சி எனக்கு வேறெதுவுமில்லை.''

நன்றிப் பெருக்கால் இதயம் நிறைந்தது புலவனுக்கு. ''வேண்டாம், இளவரசி! தங்கள் அன்பே எனக்குப் பெருந்துணை. அதுவே போதும்'' என்று நெகிழ்ந்து கூறினான் புலவன்.

அப்போது வெளியே அதிர்ச்சி ஒலி கேட்டது. பெரிய சத்தத்துடன் வெளிக் கதவு திறந்தது. அடக்க முடியாத கோபத்துடன் வாயிலில் நின்று கொண்டிருந்தான் இராஜ ராஜன்.

''இளவரசி! தாங்கள் விரும்பி யிருந்தால் புலவனைத் தங்களின் இருப்பிடத்துக்கே அனுப்பி வைத்திருப்பேனே!'' என்றான்.

''எதேச்சையாக நான் உலவிக் கொண்டிருந்தபோது சாளரத்தின் அருகில் இவர் கம்பரைப் படித்துக்கொண்டிருப்பதைக் கண்டேன். எட்டிப் பார்த்தேன். வேறொன்றுமில்லை.''

கவிஞனிடம் விடை பெற்றுக்கொண்டாள் பாமினி. கதவுகள் மூடப்பெற்றன. சாளரத்தின் கதவுகளும் வாயிற் கதவுகள் பெற்ற அதே பேற்றைப் பெற்றன. (தொடரும்)




பழம் பெரும் காப்பியத்தைக் காணப் போகிறோம் என்ற பெருமையோடு அரங்கத்துள் நுழைந்தேன். ஆனால் அங்கே கண்டதென்ன? இளங்கோவடிகள் உணர்த்திய கோவலன் கண்ணகி மாதவி இவர்கள் பண்பாடு 'கருணாநிதியின் பூம்புகார்' படத்தில் பாழ்பட்டுள்ளது. இளங்கோ உணர்ந்து உணர்த்தியது ஒன்று; இவர் உணர்ந்தது ஒன்று. ஆனால் உணர்த்தியதோ வேறொன்றாகி விட்டது. இதற்குப் படத்தில் பல சான்றுகள் காட்டலாம்.

கற்பின் பெருமையையும், ஊழின் வலிமையையும் நம்ப மறுக்கிறவர்கள் கையில் காவியம் என்ன பாடுபட்டிருக்கிறது என்பதைப் படம் பார்ப்பவர்கள் புரிந்து கொள்வார்கள். கற்பின் ஆற்றலைக் கண்ணகியின் வழியாக உலகுக்கு உணர்த்த எண்ணிய அடிகள், அவள் மாட்டுக் காணும் பண்பாட்டு வழி உணர்த்திப் படிப்படியாகத் தக்கவர் வாய்மொழியால் விளக்கி, தெய்வ ஒளி கண்டு வியந்து போற்றிக் கற்புக்கு அணியாய கண்ணகியை விண்ணக மாதருக்கு விருந்தாக்கிப் பெண் குலத்தின் பெருமையைக் கலை வழி நின்று வடித்துக் காட்டிய பெருமை எங்கே? பொறுப்பும் கடமையும் இன்றி, பண்பையும் மரபையும் சிதைத்து, பொருளும் புகழும் சேர்க்கும் மனமுள்ளவர்களால் நேர்ந்துவிட்ட சிறுமை எங்கே?

கோவலன் பாத்திரமும் இளங்கோவடிகள் காட்டியபடி அமையவில்லை. அவன்பால் இயல்பாக அமைந்திருந்த கலை நுணுக்கம், கொடைச் சிறப்பு, அறவுணர்வு, கருணை உள்ளம் ஆகியவற்றை யெல்லாம் தக்கபடி பயன்படுத்தாமற் போனது வருந்தத் தக்கது.

பிறப்பிற் குன்றாப் பெருந்தோள் மடந்தை மாதவியும் இளங்கோ காட்டிய மாதவியாக இல்லை. அவள் மரபு, கலைச் சிறப்பு, தூய அன்பு, முத்தமிழ் உணர்வு, துறவறத் தூய்மை இவை யாவும் அவள் மாட்டு அமைத்துக் காட்டாது, கவிஞர் இருபதாம் நூற்றாண்டில் நாம் கண்ட அநுபவத்தை மாதவியிடம் பொருத்திக் காட்டி விருப்பது வெறுக்கத் தக்கதொன்றாகும்.

'விலை மகள்', 'உடல் வாணிபக்காரி' என்றெல்லாம் மாதவியைப் பற்றிக் கூறுவது வருந்தத் தக்கது.

இளங்கோ குறிப்பாகக் கூறிச் சென்றதைக் காவியத் தலைவர்கள் பெருமை விளங்குமாறு நிகழ்ச்சிகளைக் கற்பித்திருந்தால் பாராட்டுக் குரியதாகும். மூல ஆசிரியரே நிகழ்ச்சிகளை அருமையாகச் சித்திரித்திருக்க, அதைப் பலரும் உணர—உணர்த்த முடியாமல் காட்சியை மாற்றுவதால் நேர்ந்த அவலம் பலப் பல. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மக்களின் வாழ்வைக் காண முற்படும்போது, அவர்கள் வாழ்ந்த அந்தக் காலச் சூழ்நிலை — சமுதாய அமைப்பு இவற்றைக் கண்டு தெளிந்து அதற்குத் தக்கபடி அவர்கள் வாழ்வு அமைந்த முறையைக் காண வேண்டுமே தவிர நாம் வாழும் காலத்துச்

சூழ்நிலை, சமுதாய அமைப்பு இவற்றைக் கொண்டு கணக்கிடுவது அறிவுடைமை யாகாது; இலக்கியம் துய்க்கும் முறையுமன்று.

மாதவி மணிமேகலைக்காகவே உயிர் வாழ்ந்து அவளை அறச்செல்வியாக்கிய புரட்சியே 'மணிமேகலை'க் காவியம் எழக் காரணமாயிருந்தது. அவள் மேற்கொண்ட துறவு ஒன்று போதும் அவளுடைய பெருமை பேச; அதை இளங்கோவடிகள் தெளிவாகக் காட்டியிருக்க மாதவியைக் கோவலன் தாய் தந்தையரிடம் அனுப்பி மணிமேகலையையும் அவர்களிடம் ஒப்படைத்துத் தன்னை அறியாமலேயே கோவலர் செல்வம் தன் இல்லத்தில் சேர்ந்ததையும் சொல்லி விடைபெறச் செய்வது ஏன்? இதற்குச் சிலப்பதிகாரத்தில் ஏதாவது ஒரு சொல்லில் சிறு குறிப்பேனும் ஆதாரமாகக் காட்ட முடியுமா?

தெருக்கூத்தில் கண்ட காட்சிகளும் படத்தில் இடம் பெற்றிருக்கிறது.

பொற்கொல்லன் காட்சி மாற்றம் அவரைத் தன் வயப்படுத்தச் செய்த அரசியல் தந்திரம். பட்டினிப் போராட்டம்கூட அப்படித்தான்.

சந்தடிச் சாக்கில் எதை எதையெல்லாம் தங்கள் கட்சிக்குச் சாதகமாகப் பயன்படுத்த முடியுமோ அவற்றை யெல்லாம் பயன்படுத்தியிருக்கின்றனர்.

தமிழ் நெஞ்சங்களுக்கு விருந்தாக அமைய வேண்டிய காவியம். தமிழ் வளர்ந்து வாழ வேண்டிய நேரத்தில் இது போன்ற தொண்டு செய்து தமிழ் மானம் காத்துத் தமிழ் மணம் பரப்ப வேண்டிய நேரம். ஆனால் நல்ல வளர்ச்சியைத் தக்கபடி உயர்த்த முயலாது வேறு வழியில் திருப்ப முயன்றது வருந்தத் தக்கது.

கோவலன் — கண்ணகியாகத் தவழ்ந்த இராசேந்திரன் விஜயகுமாரி நடிப்பு பாராட்டுக்குரியது. சுந்தராம்பாளின் இசையில் துன்பத்தை மறக்க முடிகிறது.

பூம்புகார் நா. தியாகராசன்
செயலாளர், மாதவி மன்றம்,
மேலப் பெரும்பள்ளம் அஞ்சல்
(வழி) திருவெண்காடு.

★

பூம்புகார் ஆரம்பம், ஸெஸில்—பி—டிமில் பாணியில் ஆரம்பித்தாலும் தயாரிப்பின் தரத்திலும், நுணுக்கத்திலும் காவியத்தைப் படமாக்குவதில் இருந்த கருத்தும், குறிக்கோளும் தலைகீழ் வித்தியாசம்.

தெய்வீகம் என்று ஒரு சக்தி உண்டு என்ற எண்ணம் தமிழகத்து மக்களின் இதயத்திலிருந்து வேரோடு அகற்றப்பட வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு தயாரிக்கப்பட்ட படம் என்பதற்குச் சாட்சி சொல்லச் சான்றுகள் படம் முழுதும் திரண்டு கிடக்கின்றன.

ஸெஸில்—பி—டிமிலின் பத்துக் கட்டளையில், இயற்கையிலே கடல் கொந்தளித்து வழி விட்டது என்றும் பத்துக் கட்டளைகள் பொறிக்கப்பட்ட சாஸனமாகவே மோஸஸ் கையில் கிடைத்ததென்றும் காட்டத் தெரியாமலா மோஸஸின் ஆணைக்கு அடிபணியும் கடலையும், அக்கினி ஜ்வாலையுடன் ஒவ்வொரு எழுத்தாய்ப் பொறிக்கப்படும் பத்துக் கட்டளைகளையும் காட்டினார்?

காவியம் படமாக்கப்படும்போது காவியமாகவே அதை நோக்க வேண்டும் என்று அவர் நினைத்தார்; வெற்றியும் பெற்றார்.

எல்லாமே இயற்கையாக நடப்பதாகக் காட்சிகள் அமைப்பதற்கு ஒரு காவியத்தைப் படமாக்கப்பட வேண்டிய தேவையே யில்லை. அருணகிரி நாதரைத் 'திரும்பிப் பாரா'க்கியது போல் சிலப்பதிகாரத்தைத் 'திரும்பிப் போ' என்று ஆக்கியிருக்கலாமே!

பாண்டிய நெடுஞ்செழியன் தர்பாருக்குப் பதிலாக ஒரு கோர்ட் சீன் வைத்துக் கதையை முடித்திருக்கலாம்.

பத்தினிப் பெண்ணாக இருப்பவள் தெய்வ பக்தி உள்ளவளாக இருக்கக் கூடாதா? கணவனைப் பிரிந்த கண்ணகி ஆறுதலுக்காகவாவது தெய்வத்திடம் முறையிடக் கூடாதா? அத்தனை பகையா பத்தினித்தனத்துக்கும் தெய்வ வழிபாட்டுக்கும்? இந்திர விழாவும், குரவைக் கூத்தும் நடத்திய காலத்தில் பக்தி கேலிக் கூத்தாக இருந்திருக்க முடியாதே!

கண்ணகி ஒரு நாஸ்திகவாதியாகத்தான் வாழ்ந்திருக்க வேண்டுமோ? அப்படியானாலும் அவள் சிலம்பில் ஒன்றைப் பாண்டியன் உடைக்கும்போது சாதாரணமாகவும், கண்ணகி உடைக்கும்போது புகையைக் கக்கிக் கொண்டும் உடைவானேன்? அந்த ஒரு சிலம்புக்குள் புகையை அடக்கியது யார்? கல்லினுள் இருக்கும் தேரைக்கும் உணவு படைப்பவனாக இருக்குமோ? நமக்குத் தெரிய வேண்டாம். அந்தக் கண்ணகிக்கும் இந்தக் கதாசிரியருக்குமே வெளிச்சம்!

சிலப்பதிகாரம் ஒரு காவியம். அதைச் சின்னாபின்னப்படுத்த எவராலுமே முடியாது. வாழ்க தமிழ்! வாழ்க சிலப்பதிகாரம்!

என். செந்தூர் பாண்டியன்
23, பஜனைக்கூடத் தெரு,
பாலக்கரை, திருச்சி

[“பூம்புகார்” படத்தில் சிலப்பதிகாரக் கதை பல மாறுதல்கள் அடைந்திருப்பதோடு காவியத்தின் முக்கிய இடமாகிய மதுரையம்பதியையும், வைகை நதியையும் துளிக்கூடக் காட்டாமல், விஜயநகர சாம்ராஜ்யத்தின் பழம் பெருமையைக் கூறும் சிதிலமடைந்த ஹம்பி ஆலயங்களைக் காட்டுவது என்ன பண்பாடென்றே புரியவில்லை. எங்கள் பேச்சும் மூச்சும் தமிழ் என்று முழக்கமிடும் தயாரிப்பாளர்கள் தமிழகத்தின் கலைக் கோயில்களைக் காட்டாதது ஏன்? சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் கோயில்களுக்குப் பஞ்சமா? கோவலன் மதுரைக்குச் செல்கிறான் என்று ஹம்பியின் கோயில் கோபுரத்தைக் காட்டுகிறார்களே! மதுரைக் கோயில் கோபுரம் அழகற்றதா? தமிழ்ப் பெருங் காப்பியத்தைத் தயாரிக்கும் போது தமிழ் நாட்டுக் கோயில்களின் பின்னணிகூட அதற்குத் தேவையில்லை என்று கருதிவிட்டார்கள் போலும். ஹம்பியின் ஆலயங்கள் புராதனப் பெருமை வாய்ந்தவைதானென்றாலும், தமிழ்ப் பெருங்காப்பியத்தில் இடம் பெறுவதற்கான முக்கியத்துவம் ஏதும் அவற்றிற்கில்லையே?-ஆசிரியர்]

# 12. ஒன்றுபடுவோம், ஒழித்துவிடுவோம்!

**பீ**ஜப்பூர் எங்கும் அதே பேச்சாக இருந்தது. நாட்டின் கௌரவப் பிரஜைகள் என்று கருதப்படும் உயர் குடிப் பிறந்தவர்கள், மன்னர் வெற்றி பெற்று வந்ததை எண்ணித் திருப்தியடையவில்லை. எங்கே இரண்டுபேர் சந்தித்தாலும் இது பற்றியேதான் பேசினார்கள். மசூதிகளில் தொழுகைக்காகக் கூடும்போது மதத் தலைவர்கள் இதை நினைத்தே மனம் மறுகத் தணிவான குரலில் பிரார்த்தனைகள் நடத்தினார்கள்.

''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்...'' என்று ஆகாயத்தை நோக்கிக் கைகளை உயர்த்தி, பேரருளாளனும் அளவற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்விடம் அலி ஆதில்ஷாவை மன்னிக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டு மண்டியிட்டமர்ந்து தலையைத் தரையில் பதித்துத் தொழுகை நடத்தினார்கள்.

''இஸ்லாம் இழிவுபடுத்தப் பட்டதற்குத் தங்கள் மன்னர் உடந்தையாக இருந்தார். முஸ்லிம் இன மக்களை விக்கிரக ஆராதனை புரியும் வெறியர்கள் மிருகங்களைப் போல் வேட்டையாடுவதற்கு விட்டுக் கொடுத்து விட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். காபிர்களின் கைப்பொம்மையாகி விட்ட அலி ஆதில்ஷா. மசூதிகளின் புனிதத் தன்மையைக் கெடுக்கும் செயல்களில் விஜயநகரத்து வீரர்கள் ஈடுபட்டிருப்பதைக் கண்டும் காணாதது போல அதைத் தடுக்கும் செயலிழந்து சிறுமைப்பட்டுப்போனார்'' இவையே ஆதில்ஷாவின் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள். குதப்ஷாவினால் அனுப்பப்பட்ட முல்லாக்களும், இமாம்களும், உலேமாக்களும் ஒப்பற்ற முறையில் தங்கள் பிரசாரத்தைச் செய்து கொண்டிருந்தார்கள். இனத்தையும் மதத்தையும் மக்கள் எதிரே வைத்து வசீகரமான வார்த்தைகளால் உள்ளத்தை உலுக்கி எடுக்கும் உணர்ச்சி மிக்கதொரு பிரசாரத்தை உருவாக்கி அதில் ஓரளவு வெற்றியும் கண்டு விட்டார்கள். பீஜப்பூரின் பெருங்குடி மக்களில் பலரும், அவைத் தலைவர்களில் அனேகரும் தங்கள் சுல்தான் அலி ஆதில்ஷா, அலியா ராமராயரைத் தம் அன்புத் தந்தையாக ஏற்றுக் கொண்டதை எண்ணி அப்போதே அதிருப்தி அடைந்தவர்கள். இப்போது இப்படியொரு செய்தி — இனப்பற்று மிகுந்த அவர்களின் இதயங்களைக் கனக்க வைத்தது.

தன் நாட்டிலே தன்னைப் பற்றியே நடக்கும் தவறான பிரசாரத்தின் தகவல் ஆதில்ஷாவின் கவனத்துக்கு வந்தது. அவரது கவனத்தைக் கவரவேண்டித் தானே பிரசாரகர்கள் முயன்று கொண்டிருந்தார்கள்! முதலில் ஆதில்ஷா இதை அலட்சியமாகத்தான் நினைத்தார். ஆனால் நாளாக நாளாக நாட்டு மக்கள் அதற்கு முக்கியத்துவம் கொடுத்து முகம் கடுக்கிறார்கள் என்பதை ஒற்றர்கள் கொண்டு வந்த செய்திகள் உறுதிப் படுத்தின. இனி அதை



அப்படியேவிட்டால் விசுவரூப மெடுத்து விட்ட அது தன்னையே விழுங்கிவிடும் என்பதை உணர்ந்தபோது, உலேமாக்களும் அரசியலில் அங்கம் வகிக்கும் பிரபுக்களும் சுல்தானைப் பேட்டி காண விரும்புகிறார்கள் என்ற செய்தியும்கூட வந்தது.

பீஜப்பூரின் ஆலோசனை மண்டபமான தாரிமஹால், முஸ்லிம் மதக் கோட்பாடுகளைத் தங்கள் மூச்சாக மதித்து வாழும் முதியோர்களின் கூட்டத்தால் நிரம்பி இருந்தது. உள்ளத்தின் தூய்மையை எடுத்துக் காட்டுவதே போல வெள்ளை ஆடை அணிந்திருந்தார்கள் அவர்கள். வயதின் முதிர்ச்சி முகத்தின் தாடியைத் தும்பைப் பூவாக்கி இருந்தது. அநுபவத்தின் அடிப்படையிலே பிறந்த அமைதியையும் சாந்தத்தையும் அணிகலன்களாகக் கொண்ட அந்தப் பெரியவர்களின் தோற்றம் பார்ப்பவர்களின் உள்ளத்தில் பக்தியையும் பயத்தையும் மரியாதையையும் உண்டாக்கின. இவர்களோடு இளமைத் துடிப்பும் இளவெறியும் கொண்ட வாலிபர்களும் அமர்ந்திருந்தார்கள். பழிவாங்கும் உணர்ச்சியால் உந்தப்பட்ட அவர்களின் கண்கள் பளபளத்துக் கொண்டிருந்தன.

அவைக்குள் நுழைந்த ஆதில்ஷா அங்கு அமர்ந்திருந்த பெரியோர்களுக்கு மரியாதையாகச் சற்றே சிரம் தாழ்த்தி இரு கைகளையும் நெற்றியின் அருகே கொண்டு போய் வணக்கம் செலுத்தினார். பிரிந்த அவரது இதழ்களின் வழியே 'சலாம் அலைகும்' என்ற வார்த்தைகள் மெல்ல உதிர்ந்தன. அவையினர் 'அலைகும் சலாம்' என்று முழக்கமிட்டுப் பதில் வணக்கம் செலுத்தினார்கள். இதன் பிறகு ஆதில்ஷா அவைத் தலைவர்கள் சூழத் தம் இருக்கையில் அமர்ந்து கொண்டார். அவர் அருகே தளபதி சித்திஜௌஹரும் இடம் பெற்றிருந்தான்.

சபையின் சலசலப்பு அடங்கி அமைதி நிலவிய போது வயதிலே முதிர்ந்து உருவத்திலே உயர்ந்த ஒரு பெரியவர் எழுந்திருந்தார்:

''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் அவர்களின் திருநாமமே நம்மை நேர்மை வழியில் நடத்திச் செல்லட்டும். அல்லாஹ்வின் மக்க

# பகை

## கௌசிகன்



ளாகிய நாம், அரசியல் அமைப்பால் பிரிந்திருந்தாலும் இனத்தால் ஒன்றுபட்டவர்கள். முஸ்லிம் இன மக்கள் எங்காவது கொடுமைப்படுத்தப்படுவதைக் கேட்டாலே கொதித்தெழ வேண்டியது நம் ஒவ்வொருவருடைய கடமையாகும். ஆனால்....'' என்று உணர்ச்சிவசப்பட்ட அவர் பேச முடியாமல் நிறுத்தினார். அம்முதியவரின் உடல் தள்ளாடியது. வெள்ளை பஞ்சுத் தாடியைத் தடவியபடியே தம் தடுமாற்றங்களைச் சமாளிக்க முயன்ற அவரது கரங்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. அதற்கு மேல் அவரால் தொடர்ந்து பேச முடியாது என்பதை உணர்ந்துதானோ, என்னவோ நடுத்தர வயதுடைய இமாம் ஒருவர் எழுந்திருந்து நடுக்கமின்றிப் பேசலானார்.

''அண்டை நாட்டிலே நம் முஸ்லிம் சகோதரர்கள் அநாகரிகமான முறையிலே நடத்தப்பட்டார்கள். நம் புனித இஸ்லாம் அங்கு இழிவுபடுத்தப்பட்டது. இரக்கமற்ற முறையிலே நம் இன மக்கள் சொல்ல முடியாத கொடுமைகளுக்குள்ளானார்கள்'' என்று ஆதில்ஷாவைப் பார்த்து முழக்கியவர் சட்டென்று தம் குரலைத் தாழ்த்தி எங்கோ பார்த்தபடி, ''இவ்வளவுக்கும் நாம் காரணமாக இருந்தோம். — காபிர்களின் கைப்பொம்மையாகி எதையும் கண்டிக்க முடியாத நிலையிலே என்பதை நினைக்கும் போது அவமானத்தால் குன்ற வேண்டி இருக்கிறது'' என்றார்.

துள்ளி எழுந்தான் சித்திஹாலன். ''இனப்பற்றை மறந்து எல்லை மீறி எதையும் செய்து விடவில்லை. அண்டை நாட்டுச் சோதரன் நம்மோடு கொஞ்சிக் குலாவிக் கொண்டிருக்கவில்லையே. வலுச் சண்டைக்கு வந்தவனை விரட்டியடிக்க வேண்டியது நாட்டை ஆள்பவரின் கடமையில்லையா? போர் முனைச் செய்திகளுக்குப் புதிய விளக்கங்களை உண்டாக்கி ஆதில்ஷா அவர்களை இனத் துரோகி என்று குற்றம்சாட்டுவது முறையல்ல.''

மதத் தலைவர்களும் மக்களின் மதிப்பைப் பெற்றவர்களும் கூடியுள்ள சபையில் தமக்கு எத்தகைய தாக்குதல்கள் காத்திருக்கின்றன என்பதை அறிந்தே வந்திருந்த ஆதில்ஷா சித்திஹாலனை அமைதியாக இருக்கும்படி கையமர்த்தினார். ''உணர்ச்சிவசப்படுபவர்களால் ஒன்றுமே செய்ய முடியாது சித்திஹாலன்! அவர்கள் கூற வேண்டியதைக் கூறி முடிக்கட்டும். பிறகு நாம் அவைகளுக்குப் பதில் கூறலாம்'' என்றார்.

''அப்படியானாலும்..... ஆதில்ஷா அவர்கள் நாங்கள் கூறப் போகும் எதையும் நம்பத் தயாராக இல்லை போலிருக்கிறது'' என்றார் தலைவராகத் தோற்றமளித்த ஒருவர்.

''அதற்கு நான் இங்கு உங்களைச் சந்திக்கச் சம்மதித்திருக்கவே வேண்டாமே! உங்கள் குற்றச்சாட்டுகளை முழுமையாகக் கேட்ட பிறகுதான் அதை மறுக்கவோ ஏற்கவோ முடியும் என்று கருதுகிறேன். ஆனால் பொதுவாக ஒன்றை மட்டும் கூற விரும்புகிறேன். அண்டை நாட்டான் நம் இனத்தானாலும் போர் என்று போகும் போது விரோதி என்ற மனப்பான்மையோடுதான் செயல்பட முடியுமே தவிர...''

ஆதில்ஷாவை முடிக்க விடவில்லை அந்த முதியவர். ''அகமது நகர், கோல்கொண்டா இவற்றின் மீது பீஜப்பூர் மட்டும் தன்னிச்சையாக முற்றுகையிட்டிருக்குமானாலும் முஸ்லிம் இனத்துக்கு இத்தகைய அநீதி இழைக்கப்பட்டிருக்காது. வஞ்சம் தீர்த்துக் கொள்ளச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த விஜயநகரத்தின் வன்முறைச் செயல்களுக்கு வழி வகுத்துக் கொடுத்து விட்டீர்கள் - அதன் உதவியை வேண்டிப் பெற்று.''

''விஜயநகரின் உதவியைப் பெற்றது முறையா தவறா என்பதைப் பற்றி இங்கு நான் விவாதிக்கப் போவதில்லை. அது அரசியல் விஷயம். நாம் இங்கு இனத்தையும் மதத்தையும் பற்றித்தானே பேசிக் கொண்டிருக்கிறோம்! உதவிக்கு வந்த ராமராயர் முறையற்ற செயல்களில் இறங்கியதாகக் கூறுகிறீர்களே, அவை யவை என்பதைச் சற்று விவரிக்க முடியுமா? போர் முனையில் அவர் கூடவே இருந்த என்னாலும் அவர் புரிந்த அநீதிகளை அறிந்து கொள்ள முடியவில்லை. உள் நாட்டிலிருந்த உங்கள் மூலமாகவாவது அவைகளைத் தெரிந்து கொள்ளுகிறேன்!'' என்றார் ஆதில்ஷா. அவர் பேச்சிலும் முகத்திலும் ஏளனம் தெறித்தது.

''ஆதில்ஷா அவர்களுக்கு விருப்பமில்லாத விஷயத்தை இங்கு நாங்கள் விவாதிக்க வந்திருப்பதாகக் கருத வேண்டியிருக்கிறது'' என்றார் ஒருவர், சுல்தானின் ஏளனத்தைப் புரிந்து கொண்ட [illegible].

''என் விருப்பு வெறுப்புக்கள் இங்கு முக்கியமல்ல. முஸ்லிம் இனத்தின் காவலன் என்ற முறையில் அப்பதவியின் தலைவர்களான உங்கள் வாதங்களை விரும்பிக் கேட்கக் கடமைப்பட்டவன் நான். சொல்லுங்கள்.''

''கோல்கொண்டாவிலும் அகமது நகரிலும் இந்துக்களால் அழிக்கப்பட்ட மசூதிகளின் எண்ணிக்கை ஏராளம்.''

''இந்த நாட்டிலே நாம் அழித்துள்ள கோயில்களைவிடவா?'' என்ற ஆதில்ஷாவின் பதிலால் அதிர்ச்சியடைந்தவர் அமைதியானார். அதைக் கண்ட அவர், ''என் பதில் உங்களை ஆத்திரமடையச் செய்திருப்பதை அறிகிறேன். காட்டாற்று வெள்ளம் தன் கரை மீதுள்ள மரத்தை, தான் வளர்த்தது என்று விட்டு வைப்பதில்லை. தன் அசுர வேகத்துக்கு அதையும் பலியாக்கிக் கொண்டு தான் போகிறது. அது போல..... போர் என்ற போது அழிவையே குறிக்கோளாகக் கொண்டு முன்னேறிச் செல்லும் படை வெள்ளத்தின் வழியில் இத்தகைய அசம்பாவிதங்கள் ஒரு சில நேரத்தான் செய்யும். அதைப் பெரிதாக்கிப் பேசுவது முறையல்ல.''

''முஸ்லிம் பெண்கள் விஜயநகரத்து வீரர்களால் முறைகேடாக நடத்தப்பட்டிருக்கிறார்கள். மானமிழந்த மங்கையர்கள், கற்பிழந்த கன்னியர்கள் ஏராளம், ஏராளம்! இதைக் கேட்கும் போது இஸ்லாத்தில் பிறந்த எங்கள் இரத்தம் கொதிக்கிறது. எங்களில் ஒருவரான உங்கள் நிலையும் அப்படித்தான் இருக்க வேண்டும்.''

''உங்கள் கூற்று உண்மையாக இருக்குமானால் என் நிலை பற்றித் தங்கள் கருத்தும்

# கர்நாடக ஸங்கீதம், கிருதிமணிமாலை

## திருத்தப்பட்ட விரிவான இரண்டாம் பதிப்பு

## 689 தியாகராஜ கீர்த்தனைகள்

கர்நாடக ஸங்கீதப் பிரசுரங்களில் இணையற்ற கலைப் பொக்கிஷம் — 50 ஆண்டு ஆராய்ச்சியின் விளைவு — இதுகாறும் வெளிவராத வகையில் விஸ்தாரமான ஸ்வர தாள அமைப்பு — ஒவ்வொன்றும் 800 பக்கங்கள் கொண்ட 2 பாகங்கள் — கிரௌன் ஸைஸ் — அச்சிடுவது சில பிரதிகளே. 1964 நவம்பர் 1ந் தேதிக்கு முன் ரூ. 35 அனுப்புவோருக்கு 2 பாகங்களும் தபாற் செலவின்றி 1965 ஜனவரி 1ந் தேதி ரிஜிஸ்தர் தபால்மூலம் அனுப்பப்படும். நவம்பர் 1ந் தேதிக்குப் பிறகு 2 பாகங்களின் விலை ரூ. 40. தபாற் செலவு புத்தகம் ஒன்றுக்கு ரூ. 3.

**பிரசுர விலாசம்**

**பத்மா வரதன்** Dept. C
" கஸ்தூரி பில்டிங் "
20, ஜம்ஷெட்ஜி டாடா ரோடு
சர்ச்கேட், பம்பாய் - 1

**ஆர். ரங்கராமானுஜ அய்யங்கார்** Dept. C
பிரசுர ஆசிரியர்
" ஸபர்மதி ", ஸேட் காலனி
எழும்பூர், மதராஸ் - 8

---

## " தேயிலைத் தோட்டத்துக்கே போய்த் தேயிலை வாங்கி வந்து விட்டேன் "

என்று ஒரு சிலர் பெருமையாகச் சொல்லிக் கொள்வது சகஜம்.

அவர்கள் தேயிலைத் தோட்டத்திலேயே தேயிலை வாங்கி விட்டதால், வாங்கியது முதல்தர இலை யென்பதும் நிர்மானமில்லை. அது விலை மலிவாக வாங்கப்பட்டதென்பதும் நிர்மானமில்லை. இந்த உண்மை அநுபவப்பட்டவர்களுக்குத்தான் தெரியும்.

தோட்டத்திலுள்ள நல்ல இலைகள் விற்பனைக்கு வெளியூர்கள் போய் விடுகின்றன. எஞ்சி யிருக்கும் இலையும் வெளி விலைக்குத்தான் கிடைக்கும். அதைச் சுமந்து வந்த சிரமந்தான் மிச்சம்.

பட்டுப் புடவைகளில் இத். சிரமத்தைத் தவிர்த்துக்கொள்ள:-

# சம்பூர்ண சாஸ்திரியார் & சன்ஸ்

பட்டு ஜவுளி- உற்பத்தியாளர் & வியாபாரிகள்
வடக்கு மாட வீதி-மயிலாப்பூர்- மதராஸ்-4

ஸ்தாபிதம் : 1902 போன் : 71719

கல்கத்தா: **14-A, Park Side Road, CALCUTTA- 26**

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்க




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் களில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால் பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப் படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிசோதனைகள் நிரூபித்துள்ளன: இ சாதனை கால்கேட் டுன் நற்குத்தா உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீரியமும், நைடுரையும் தன்மையுடைய நுரை பற்களின் இடைவெளிகளில் புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் சேர்த்திருக்கும் அருமையான நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் பற்பொடி மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெ வும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளைய விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.**

அப்படித்தானிருக்கும். ஆனால் மங்கையர்களுக்கு மதிப்பளித்து, அந்நியப் பெண்களை அன்னையாகக் கருதும் பாரத நாட்டு வீரர்களா இப்படிச் செய்வார்கள் என்று யோசிக்க வேண்டி இருக்கிறது. காரணம், நீங்கள் கூறும் இந்தச் செயல்களில் ஒன்றாவது போர் முனையிலே என் கவனத்துக்குக் கொண்டு வரப்படவில்லை. ராமராயரின் படையிலே முஸ்லிம் வீரர்களும், தளபதிகளும் கூட இருக்கிறார்கள் என்பதை நாம் மறந்து விடுவதற்கில்லை'' என்றார் ஆதில்ஷா.

விவகாரம் பேச வந்தவர் பேசாமல் நின்றார். தாங்கள் கூறும் எதையுமே ஏற்காமல் ஒவ்வொன்றுக்கும் காரணம் கூறித் தட்டிக் கழிக்கும் ஆதில்ஷாவின் போக்கு சபையோருக்குப் பிடிக்கவில்லை என்பதை அவர்களின் பார்வையே சொல்லிற்று. அதிருப்தியும் ஆத்திரமும் அடைந்த அவர்கள் தாங்கள் கூற வந்ததைக் கூறி முடித்து விடுவது என்ற முடிவோடுகொட்டலானார்கள்.

''இதை விவாத மேடையாக்கி அதிலே வெற்றி காண நாங்கள் இங்கு வரவில்லை என்பதை ஆதில்ஷா அவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். கோல்கொண்டாவிலும் அகமது நகரிலும் விஜயநகரத்துக் கொள்ளையர்கள் புகுந்து விளைவித்த கொடுஞ்செயல்களை விளக்கவே இங்கு வந்தோம். அறிந்தோ அறியாமலோ அவர்களின் வெறிச் செயல்களுக்கு நாமும் காரணமாகி இருந்தோம் என்ற அவச் சொல்லின் அவமானத்தைத் தாங்காமலே இந்த அவையை நாடி வந்தோம்....'' என்றார் ஒரு முதியவர்.

''ஆனால்....'' என்று ஆரம்பித்த மற்றொருவர், ''நாங்கள் கூறுவதெல்லாம் கற்பனை, பொய்ப் பிரசாரம் என்னுமளவுக்கு ஆலப்பனு அவர்களின் பதில்கள் இருக்கின்றன. ராமராயருடன் தாங்கள் இருந்திருக்கலாம். ஆனால் பரந்து கிடந்த போர்க் களத்தின் எல்லாப் பகுதிகளிலும் உங்கள் பார்வை பதிந்திருக்க முடியாதே! தங்கள் கண்காணிப்பிலிருந்த பகுதியிலும்கூட அவர்கள் நடத்திய பாதகச் செயல்களைத் தங்கள் பார்வையிலிருந்துமறைப்பது பலம் பொருந்திய அவர்களுக்கு ஒரு பெரிய காரியமல்லவே!''

''போர் என்றால் புனிதமான செயல்களை எதிர்பார்க்க முடியாதுதான். தோல்வி காணும் பகுதி மக்கள் துன்பங்களையும்தான் காண வேண்டும் என்பது எங்களுக்குத் தெரியும். ஆனால் இந்தப் போரிலே நடந்திருப்பது என்ன? நம் புனித இஸ்லாத்தை அவமானப்படுத்தவென்றே திட்டமிட்டுச் செயல்புரிந்திருக்கிறார்கள், ஆதிக்க வெறி கொண்ட விஜயநகரத்து வெறியர்கள்.

''மசூதிகளைக் குதிரை லாயங்களாக்கிக் கொட்டமடித்திருக்கிறார்கள். அதன் புனிதத் தன்மையை மதிக்காது அதனுள் குதிரைகளைக் கொண்டு போய்க் கட்டி அசிங்கப்படுத்தியிருக்கிறார்கள். இது மட்டுமா? அல்லாஹ்வின் திருநாமத்தைக் கூறித் தொழுகைகள் நடத்தப்பட வேண்டிய பள்ளி வாசல்களிலே பாவிகள் பஜனைகள் செய்திருக்கிறார்கள். ரஹீமின் திருநாமம் ஓதப்பட வேண்டிய இடத்திலே ராமனின் நாம சங்கீர்த்தனங்கள் நடத்தப்பட்டிருக்கின்றன!

''ஆதில்ஷா அவர்கள் இதற்கும்கூட நம் செயல்களை ஒப்பிட்டுச் சமாதானங்கள் கூறலாம். ஆனால் எல்லா மதத்தவருக்கும் சம உரிமை தந்து சகோதரர்களாகப் பழகுகிறோம் என்று பிரசாரம் செய்யும் ராமராயர் நடத்திய போரிலே இத்தகைய அட்டூழியங்கள் நடப்பதென்றால் அது திட்டமிட்ட செயல்தானே?''

வாதத்திலே வல்லவர்கள் வக்கணையாகப் பேசிய போது 'அப்படியும் இருக்கலாமோ!' என்று ஆதில்ஷா ஐயங்கொள்ளலானார்.... ''முஸ்லிம்களின் உணர்ச்சிகளை மதிப்பவர்தான் விஜயநகரத்து மன்னர் என்று எண்ணி இருந்தேன்.... ஆனால்....'' என்றபோது....

''அத்தனையும் வேஷம். அப்படி உங்களை நம்ப வைத்து அந்த நம்பிக்கையின் நிழலிலே முஸ்லிம்களை நசுக்கிக் கொண்டிருக்கிறார் நய வஞ்சகக்கார ராமராயர். நாங்கள் கூறிய இந்தக் கூற்றுக்களை மெய்ப்பிக்க முடியும். கோல்கொண்டாவிலும் அகமதுநகரிலும், துன்பங்களுக்கு உள்ளானவர்களும், அந்தப் பகுதிகளில் இந்துப் படைகள் புரிந்த அட்டூழியங்களை நேரில் கண்டு நெஞ்சம் புண்ணானவர்களும் உங்களைக் கண்டு அவைகளைச் சொல்லிக் கதறி அழ இங்கு வந்திருக்கிறார்கள். இதோ'' என்று சொல்லிக் கூடியிருந்தவர்களில் ஒரு பகுதியைச் சுட்டிக் காட்டினார். கும்பலில் ஒரு பகுதியினர் குனிந்த தலையோடு எழுந்து நின்றனர்.

ஆதில்ஷா மௌனமாக அவர்களைப் பார்த்தார். பிறகு அதே பார்வையை, இத்தனை நேரம் ஆவேசமாகப் பேசி அவையினுள்ளோரின் அனுதாபத்தைச் சம்பாதித்துக் கொண்டுள்ள அந்தப் பெரியவரின் மீதும் பதித்தார். இந்து ராஜ்யமான விஜய நகரத்தோடு நட்புக் கொண்டிருப்பதை விரும்பாத இனப்பற்று மிக்கவர்களின் திறமையான பிரசாரம்; தோல்வி கண்டவர்களின் துவேஷ மனப்பான்மையிலே தோன்றிய துஷ்பிரசாரம் இது என்பதை அவரது இதயம் உணர்ந்தாலும் இந்த நிலையில் மக்களின் ஆதரவையும் அனுதாபத்தையும் பூரணமாகப் பெற்றுவிட்ட அவர்களின் பேச்சுக்கு எதிராக எதையும் சொல்வது வெற்றியளிக்காது, விவேகமுமாகாது என்பதை அறிந்த ஆதில்ஷா விவகாரம் பேச வேண்டாம் என்ற முடிவுக்கு வந்தார்.

மன்னரின் மனமாற்றத்தை எப்படியோ அறிந்த அந்த மதிநுட்பமான மத போதகர் இனி வரும் அவரைத் தம் பக்கம் இழுப்பதற்கு ஏற்ற பக்குவமான தருணம் இதுதான் என்பதைக் கண்டுகொண்டு ''ஆதில்ஷா அவர்களின் அவநம்பிக்கை இன்னும் தீரவில்லை என்று நினைக்கிறேன்! அவதிகளுக்கு உள்ளான கோல்கொண்டாவின் குதப்ஷாவே நேரில் வந்து கூறினாலாவது நம்பிக்கை கொள்வீர்களா?'' பதில் கேட்டுத் தம் பார்வையால் அவர் இதயத்தையே துளைத்துக்கொண்டு நின்றார் அவர்.

ஆதில்ஷாவின் இதழில் இளநகை அரும்பியது. அது நடக்கக் கூடாத காரியம் என்று எண்ணினாரோ என்னவோ, "இத்தகையதொரு இக்கட்டான வேளைக்கு அப்படியொரு அந்தாட்சி கூட நல்லதுதான்." என்றார்.

"இஸ்லாத்தின் புனிதத்துவத்தைக் காக்க அவமானப்படுத்தப்பட்ட நம் இன மக்களின் இதயங்களைக் குளிர்விக்க, கோல்கொண்டாவின் குதுப்ஷா தங்கள் ஆதரவை நாடி வருவாரேயானால் அவரை அவமானப்படுத்தி விடமாட்டீர்களே?"

"அந்தளவுக்குப் பண்பு கெட்டவராக நினைக்க வேண்டாம் ஆதில்ஷாவை. பகைமை பாராட்டிப் போருக்கு வந்தவர் குதுப்ஷாவே தவிர ஆதில்ஷாவல்ல. இஸ்லாத்தின் புனிதத்தைக் காப்பதில் எனக்கும் அக்கறை உண்டு. குதுப்ஷா வருவாரேயானால் ஆதில்ஷாவின் அவமானத்துக்கு உள்ளாக மாட்டார். அவரது அன்புக் கரங்களின் அணைப்புக்கே உள்ளாவார்."

"அப்படியானால் இதோ...!" என்ற அம்முதியவரின் வெள்ளை அங்கியும் வெண்மைத் தாடியும் கழன்று விழுந்தன. அந்த இமாம் இப்ராஹிம்குலி குதுப்ஷாவாக சுயமாகி அங்கே நின்றார். இதே போல இன்னும் சில முதியவர்களும் வேஷங் களைந்து வீரர்களாகிக் குதுப்ஷாவின் பக்கத்தில் வந்து நின்றனர். அவையே ஆச்சரியத்தினால் அசைவற்றுக் கிடந்தது. யாருமே எதிர்பார்க்காத ஒரு நிகழ்ச்சி. பிரமிப்பிலே பேச்சற்றுப்போனார் ஆதில்ஷா. தன்னிலை அடைவதற்குச் சில விநாடிகளாயிற்று அவருக்கு.

இத்தனை நேரம் தம் வாதங்களால் அவையோரின் இதயங்களை நெகிழ வைத்த குதுப்ஷா இப்போது தம் வரவால் அவர்களின் உள்ளங்களிலே உயர்ந்து நின்றார். குதுப்ஷாவாகித் தம் முன்னே நிற்கும் இப்ராஹிமைத் தம் இருக்கையிலிருந்து எழுந்து சென்று ஆரத் தழுவிக்கொண்டார் ஆதில்ஷா. சில நிமிஷங்கள் வரை யாருமே என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்றே தெரியாத ஒரு திகைப்பில் மூழ்கிக் கிடந்தார்கள். சித்தெஹாலனின் நெஞ்சமோ சினத்தால் கொதித்தது.

"என்னால் நம்பவே முடியவில்லை. இப்படியெல்லாமா நடந்திருக்கும்?" என்று குழம்பினார் ஆதில்ஷா ராமராயரின் செயலைக் கோல்கொண்டாவின் காவலன் அந்தரங்க ஆலோசனைக் கூடத்தில் மேலும் விளக்கிய போது.

"நடக்காதது எதையுமே நான் கூறவில்லை. ஒரு காலத்தில் ராமராயரின் அன்புக்குப் பாத்திரமானவனாகத்தான் நானும் இருந்தேன். நான் கோல்கொண்டாவின் குதுப்ஷாவாவதற்குக் கூட அவரது உதவிதான் தேவைப்பட்டது. அதை நான் மறந்துவிடவில்லை. மறக்கவும் மாட்டேன். ஆனால் அன்றைய ராமராயர் வேறு; இன்றைய ராமராயர் வேறு."

சிந்தனையிலே மூழ்கிக் கிடந்தார் அலி ஆதில்ஷா.

"அன்று விஜயநகரத்தின் ஆட்சிப் பொறுப்பைக் கைக்கொள்ள அண்டை நாடுகளான நம் ஆதரவு அவருக்குத் தேவைப்பட்டது. ஆனால் இன்றோ தாமடைந்த வெற்றிகளின் ஆணவச் செருக்கினால் நம்மை அவமதிக்கும் நிலையில் இருக்கிறார். அளவுக்கு மீறிய சூழ்ச்சி நயம்கொண்ட அவர், அரசியல் வாழ்வில் தாம் ஓர் அசகாய சூரர் என்ற கர்வம் கொண்டுள்ளார்...."

செந்தழலாக உள்ள சூடு மாறுவதற்குள் சம்மட்டி கொண்டு அடித்தால்தான் நாம் விரும்பும் உருவத்துக்கு இரும்பை வளைக்க முடியும் என்ற இரகசியத்தை அறிந்தவரான இப்ராஹிம்; அலி ஆதில்ஷாவின் குழம்பிக் கிடக்கும் உள்ளம் தெளிவடைவதற்குள் அதைத் தம் இயல்புக்கு ஏற்றபடி மாற்றுவதற்காக, சாகஸம் நிறைந்த தமது வார்த்தைச் - சம்மட்டிகளைத் தொடர்ந்து பிரயோகிக்கலானார்.

"நாம் அனுப்பும் பிரதிநிதிகளை ராயர் உரிய மரியாதை அளித்து வரவேற்றுக் கௌரவிப்பதில்லை. விஜயநகரின் அரசவையை நாடிப் போகும் நமது தூதுவர்களை உட்காரும்படி கூடக் கூறுவதில்லையாம். அத்தனை தூரத்துக்கு அகம்பாவம் கொண்டிருக்கிறார் அரவீட்டு ராயர். பவனி வரும்போது ராயர் பல்லக்கில் வர நம் பிரதிநிதிகள் கால்நடையாக நடந்தே பின்தொடரப் பணிக்கிறார்களாம். ராயரின் உத்தரவு இல்லாமல் இஸ்லாமியர் யாருமே குதிரைகளில் ஏறிவரக் கூடாதாம்!"

குதுப்ஷாவின் குற்றச்சாட்டுக்களைத் தாங்க முடியாத சித்தெஹாலன் நலிந்தான். குயவன் கைவண்ணத்துக்கு வளையும் மண்ணாகி விடக் கூடாதே மன்னர் என்ற கவலை அவனை ஆட்கொண்டது.

"நீங்கள் குறிப்பிடுவது போலெல்லாம் ராயர் மரியாதை தெரியாமல் நடப்பவரல்லவே. நட்புக் கரம் நீட்டியபோது தொட்ட இடம் மாசுபட்டுவிட்டதாகச் சொல்லி மமதையோடு நடந்துகொண்ட அகம்பாவக்காரர்களைத்தான் நாங்கள் பார்த்திருக்கிறோம்!" என்றான் அந்த அபிசீனியன் ஆற்றாமையுடன்.

எரிக்கும் விழிகளால் அவனை ஏறெடுத்துப் பார்த்தார் குதுப்ஷா. "குட்டுப்பட்டவனுக்குத்தான் அதன் வேதனை தெரியும். குட்டிய கரம் வலிக்குமே என்று எட்டி நிற்பவன் இரக்கப்படுவது போலிருக்கிறது தளபதியாரின் பேச்சு. அகமது நகரிலே அரவீட்டான் நடத்திய அழிவு வேலைகளையும் அட்டூழியங்களையும் நேரில் கண்டால்தான் நிஜாம்ஷாவின் செயல் நியாயமென்றே நினைக்கத் தோன்றும்."

"தோல்வி கண்டவர்களின் புலம்பல் எந்த நாளுமே எந்த நாட்டிலுமே இப்படித்தான் இருந்திருக்கிறது!" ஏகத்தாளமாகச் சிரித்தான் சித்தெஹாலன்.

அவன் சிரிப்பால் விசிறிவிடப்பட்ட நெருப்பாக ஜ்வலித்த குதுப்ஷாவின் கவனத்தைத் தம் பக்கம் திருப்பினார் ஆதில்ஷா. "போகட்டும். உங்கள் திட்டம்தான் என்ன அதைச் சொல்லுங்கள்."

"இன்று விஜயநகர் பீஜப்பூரின் நண்பனாக இருக்கலாம். ஆனால் நாளும் வளர்ந்து வரும் இந்தப் பேரரசின் நிழலிலே வாழுவதென்பது என்றைக்கும் ஆபத்துதான். தென்னக முஸ்லிம் அரசுகள் இனித் தனித்து வாழ முடியாது. வாழ முயன்றால் வளர்ந்துவிட்ட இந்துப் பேரரசின் காலடியிலே மானமிழந்து கிடக்க வேண்டியதுதான். இதுவே நான் பெற்ற படிப்பினை. எப்பாடு பட்டாவது எல்லா முஸ்லிம் அரசுகளும் இணைந்து இந்த ஆணவம் பிடித்த பேரரசை ஒழித்தாக வேண்டும். இதுவே நான் கண்ட படிப்பினை வகுத்துக்கொடுத்த கொள்கை" என்று கூறினார் குதப்ஷா.

கடகடவென்று சிரித்தான் காளையைப் போல சித்திஜாலன். "உங்கள் படிப்பினையும் கொள்கையும் நடைமுறைக்கு ஒவ்வாத விஷயங்களாக அல்லவா இருக்கின்றன? விஜயநகரத்தை வீழ்த்தவா? முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதையல்லவா அது?"

ஆத்திரப்பட வேண்டிய குதப்ஷா அமைதியாகப் பேசினார். "ஆதில்ஷா அவர்கள் தமது தளபதியாரை இங்கிருந்து வெளியேற்ற வேண்டும் அல்லது வாயை மூடிக்கொண்டிருக்கும்படியாகவாவது உத்தரவிட வேண்டும். பாமினியாரின் பராக்கிரமத்தை அறியாத அந்நிய நாட்டவரான அவருக்கு மன்னர்களாகிய நம் பேச்சில் குறுக்கிடும் யோக்கியதை கிடையாது..." பீஜப்பூர் அரசியல் தலைவர்கள் குதப்ஷாவின் வாதத்தை ஆமோதிப்பவர்கள் போலத் தலையசைத்து முறுவலித்தார்கள். அவர்களின் உள்ளத்தை உணர்ந்த ஆதில்ஷா மௌனமாக இருந்தார். நிலைமையைப் புரிந்து கொண்ட சித்திஜாலன் சிங்கமென உடலைச் சிலிர்த்துக் கொண்டு எழுந்திருந்தான். சீறிப் பாயும் வேங்கையென வெளியேறினான்.

"பழம் பெருமை பேசிப் பயனில்லை. இன்றைய நிலைமை என்ன?" என்று குதப்ஷாவைத் தன் நினைவுக்குக் கொண்டு வந்தார் பீஜப்பூர் சுல்தான்.

"பழம் பெருமையிலேதான் வீரன் பலம் பெறுகிறான். அன்று ஒன்றுபட்டிருந்தோம். விஜயநகரத்தை ஓட ஓட விரட்டிக்கொண்டிருந்தோம். வெற்றியே பாமினியின் வாழ்வாக இருந்தது. பின்பு பிளவு பட்டோம். பிரிந்து போனோம். கொள்கைகள் மாறுபட்டன. உட்பகைகள் அதிகரித்தன. இன்று பகைவன் பலம் பெற்றுவிட்டான். அவன் கை ஓங்கிவிட்டது. அவனிடமே உதவி கேட்டுப் போகும் துர்ப்பாக்கிய நிலையும் நமக்கு ஏற்பட்டது. இன்று அகமது நகருக்கும் கோல்கொண்டாவுக்கும் நேர்ந்த பரிதாபம் நாளை பீஜப்பூருக்கும் நேரலாம். ஆகவே இந்த அவமானத்தை ஆதில்ஷா தன்னுடையதாகவே கருதிச் செயல்பட வேண்டும்...."

"எப்படியோ?..." என்றார் எங்கோ பார்த்தபடி ஆதில்ஷா.

"நம்மிடையே உள்ள வேற்றுமைகளை மறந்து ஒன்றுபடுவோம். முஸ்லிம் இனத்தின் பொது விரோதியாக விஜயநகரத்தைக் கருதி, வளர்ந்து வலிமை பெற்று வரும் அதை ஒழித்துக் கட்டுவோம்" என்றார் குதப்ஷா.

"நம்முள் ஒற்றுமையா? பாமினி சுல்தான்கள் நண்பர்களாகவா?" என்று நகைத்தார் ஆதில்ஷா. "அப்படி ஒரு எண்ணமிருக்குமானால் அகமதுநகர் பீஜப்பூரை வம்புச் சண்டைக்கு இழுக்குமா? கோல்கொண்டாவை நண்பனாக எண்ணி உதவிக்கு வருமாறு அழைத்ததே பீஜப்பூர். என்ன நடந்தது?" என்று கேட்டார்.

குத்திக் காட்டியபோது குன்றிப்போனார் குதப்ஷா. "மறக்க முடியாத செயல்தான். இருந்தாலும் நடந்து போனவைகளை மறந்துவிடும்படி ஆதில்ஷா அவர்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இந்துப் பேரரசின் தலைமையிலே முஸ்லிம்களாகிய நாம் இணைவது நடவாத காரியம். அதனால்தான் நமக்கு இந்த இழிநிலை ஏற்பட்டது. முஸ்லிம் இனத்தின் பெருமைகளைக் காக்கவென்றே தென்னக முஸ்லிம் அரசுகள் இணைய வேண்டும். நம் பொது எதிரியாக விஜயநகரத்தை எண்ணிச் செயல்பட வேண்டும். அப்போதுதான் நமக்கு வாழ்வுண்டு. இதற்காகவே நான் இங்கு வந்தது" என்றார் குதப்ஷா. இனத்தின் பெயரால் மதத்தின் பெயரால் மன்றாடியபோது அவைத் தலைவர்களும் அவருக்குச் சாதகமாகவே பேசினார்கள். ஆதில்ஷாவும் அசைந்து கொடுக்கும்படியாயிற்று.

"இஸ்லாத்தின் ஒற்றுமைக்காக எங்களோடு இணைவதானால், காபிர்களின் உதவியை நீங்கள் நாடும்படியான சூழ்நிலையை உருவாக்கிய அந்த நிஜாம்ஷாவின் மருமகனாகவே உங்களை ஆக்கி வைக்கிறேன்" என்று ஆசைகளை வளர்த்தார் குதப்ஷா.

ஆதில்ஷாவோ புதிய செய்தியைப் புரிந்து கொள்ள முடியாத வியப்பில் திகைத்தார். "என்ன சொல்கிறீர்கள்....?"

"அகமதுநகர் சுல்தான் நிஜாம்ஷா தன் அருமை மகள் சாந்த் பீபியை பீஜப்பூரின் ஆதில்ஷாவுக்கு மணமுடித்து வைப்பார். அவர் ஆதில்ஷாவின் அருமைச் சகோதரியைத் தம் மூத்த மகன் முர்துஜாவின் வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொள்வார்."

நிஜாம்ஷாவின் அருமை மகள் சாந்த் பீபியின் அழகையும் அறிவையும் பற்றிக் கேள்விப்பட்டவர் ஆதில்ஷா. அந்தச் சுந்தரி தனக்கு மனைவியாகக் கிடைப்பது சாத்தியமானாலும் அதைவிடப் பாக்கியம் வேறில்லை. நம்பிக்கைப்பட முடியாத நிலையில் "நடக்கக் கூடிய காரியமா?" என்றார்.

"நடத்திக் காட்டுகிறேன். எப்பாடு பட்டாவது எல்லா முஸ்லிம் அரசுகளையும் எந்த விதத்திலாவது இணைத்து ஆணவம் மிக்க விஜயநகரத்தை அழித்தே தீருவேன். அதுவே என் லட்சியம்" என்று சூளுரைத்தார் குதப்ஷா.

சாந்த் பீபியின் நினைவிலே தன்னை மறந்து போய் உட்கார்ந்திருந்தார் ஆதில்ஷா.

'வெற்றி வெற்றி' என்று எக்காளமிட்டது குதப்ஷாவின் உள்ளம். (தொடரும்)

"ப்ரின்ஸ் பிளேடு
சிறகைப்
போன்ற
மென்மை தரும்
பிளேடு"

கரடுமுரடான தாடியுடைய ஒருவர் சொல்வதைக் கேளுங்கள்-ப்ரின்ஸ் பிளேடினுல் க்ஷவரம் செய்து கொள்வது ஒரு சிறகை உபயோகிப்பது போன்றதாகும்! அவ்வளவு மழுமழுப்பானது...அவ்வளவு சுத்தமானது... அவ்வளவு இதமானது...உங்கள் ரேஸர் மயிர்க்கால்களினூடே சென்று.. அந்தப் பரவசமான மென்மையின் உணர்வை உங்களுக்குத் தருகிறது... ப்ரின்ஸ் பிளேடின் விசேஷ ப்ளூரோ கார்பன் ஓரம் தான் இதற்குக் காரணம்.

மேலும், ப்ரின்ஸ் பிளேடினுல் அதிகமான க்ஷவரங்கள் செய்து கொள்ளலாம். இந்தியா, மேலும் மேலும் அதிகமான மனிதர்கள் ப்ரின்ஸ் பிளேடை உபயோகிக்கிறார்கள்...நீங்கள் இதுவரை மாற்றிக்கொள்ளவில்லையானால், உடனே ப்ரின்ஸ் பிளேடு உபயோகிக்க ஆரம்பியுங்கள்.




# ப்ரின்ஸ் பிளேடு



ப்ளூரோ கார்பன் ஓரம் கொண்டது

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: முல்லர் & பிப்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

P.G.3/M

# ஒலிம்பியாவிலிருந்து டோக்கியோவரை

புதிய புதிய சாதனைகளும், மேன்மேலும் வளரும் திறமையும் ஒலிம்பிக் விளையாட்டு வீரர்களின் குறிக்கோள்களாய் விளங்குகின்றன. மனிதனின் நாட்டத் தேர்ச்சிக்கும் சக்திக்கும் ஒரு களமாய் அறுதி காலம் தொட்டு அடுத்தடுத்து நடைபெற்று வந்திருக்கும் ஒலிம்பிக் போட்டிகள் கி. மு. 884-ஆம் ஆண்டிலேயே நடந்திருப்பதாக கணிக்கிறார்கள். ஆயினும் கி. மு. 776ம் ஆண்டு நடந்த ஒலிம்பிக் போட்டிகள்தாம் சான்றுடன் கூடிய முதல் போட்டிகளாய்க் கருதப்படுகின்றன. இவை நடந்த சிறிய அரங்கைச் சுற்றி வந்து கொரபோஸ் என்பவர் இருநூறு மீட்டர் நடைப் பந்தயத்தில் வென்றார். இதற்குப் பிறகு ஒலிம்பிக் போட்டிகள் பிரபலமான பட்டினங்களில் நான்காண்டுகளுக்கொரு முறை நடத்தப்பட்டன. காரின்த், டெல்பி, நேமியா ஆகியவை இந்தக் கௌரவம் பெற்ற நாடுகளில் சில. ஆயினும் இந்த விழா ஒலிம்பியா பட்டணத்தில்தான் அடிக்கடி நடத்தப்பட்டது.

இந்த மாபெரும் விளையாட்டு விழாவுக்கெனப் பிரத்தியேகமாய்க் கட்டப்பட்ட கட்டடங்களையும், அமைப்புக்களையும் ஒலிம்பியாவில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வு ஆராய்ச்சிகள் காட்டுகின்றன. இந்தக் கட்டடங்களில் மிக முக்கியமானது ஒலிம்பியம்: இதில்தான் உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றான ஜீயஸ் கடவுளின் தந்தத்தால் ஆன உருவச்சிலை இருந்தது! இந்தச் சிலையின் அங்கி சுத்த தங்கத்தினால் ஆனது.

ஜீயஸ் உருவச் சிலை முன்பாக விளையாட்டு வீரர்களும், நீதிபதிகளும் ஒலிம்பிக் பிரமாணம் எடுத்துக் கொள்வது மரபு. போட்டியில் கலந்து கொள்வோர் விதிகளை அனுசரிப்பதாயும், நீதிபதிகள் நியாயமாய் நடந்து கொள்வதாயும் பிரமாணம் எடுத்துக் கொள்வார்கள். வீரர்களின் வெற்றிக்கும் போட்டிகளின் வெற்றிக்கும் வழிபாடு நடைபெறும்.

ஒலிம்பிக் போட்டிகளின் தோற்றம் பற்றிப் பல கதைகள் உண்டு. முக்கியமான சிலவற்றைத் தவிர அவை எல்லாவற்றையும் இங்கு கூறுவது சாத்தியமல்ல.

ஒலிம்பிக் விழா ஒரு மதச் சடங்காகத் தோன்றியது என்று கிரேக்கப் புராணப்

லோக சுந்தரம்



தெரிவிக்கிறது. இவ்வுலகின் ஆட்சியைக் கைப் பற்றுவதற்கு, கடுமையான மல்யுத்தம் ஒன் றில் க்ரோனேஸை ஜீயஸ் கடவுள் வென்ற தைக் குறிக்கும் வகையில் இந்தப் போட்டிகள் நடைபெறத் தொடங்கியதாகப் புராணம் கூறுகிறது.

இதோ மற்றொரு சுவையான கதை. ஈமோமாஸ் அரசருக்கு ஹிப்போடேமியா என்னும் மகள் இருந்தாள். இளவரசியை ரதத்தில் கடத்திச் சென்று யார் வென்று மாறுலும் அவளை மணந்து கொள்ளலாம் என்று மன்னர் அறிவித்தார். ஆனால் அது எளிதில் எவரும் செய்யக் கூடிய காரியமல்ல. ஏனெனில் இளவரசியை யாரேனும் ரதத் தில் கடத்திச் செல்ல முயன்றால், மன்னர் இன்னும் வேகமான மற்றொரு ரதத்தில் தொடர்ந்து வந்து மணமகனைக் கொன்று விடுவார். இந்த நிபந்தனை பெலோப்ஸ் என் னும் இளைஞனுக்குக் கடினமாகப் படவில்லை. எளிதான காரியமொன்று செய்தான் அவன். மன்னரின் தேரோட்டிக்கு லஞ்சம் கொடுத்து அரசரின் ரதத்தின் அச்சைப் பழுதாக்கச் செய்து விட்டான். முடிவு? பெலோப்ஸ் ஹிப்போடேமியாவை மணந்து கொண்ட தோடு அரியாசனத் திலும் ஏறிவிட்டான். பெலோப்ஸ் தனது வெற்றியைக் குறிப்பதற்காக ஒலிம்பியாவில் விளையாட்டுப் போட்டிகளைத் தொடங்கினான் என்பது கதை.



நாம் எந்தக் கதையை நம்பினாலும் நம்பா விட்டாலும் ஒலிம்பிக் போட்டிகள் தொடங் கிய காலத்திலிருந்து சுமார் ஆயிரம் ஆண்டு களுக்குத் தொடர்ந்து நடைபெற்றன. கிரேக்க நகர ராஜ்யங்களின் பிணக்குகளும் பூசல்களும் பெருகினாலும் நான்காண்டுகளுக் கொரு முறை ஒலிம்பிக் விழா நடைபெறுவது தவறவில்லை.

ஆனால் ரோமானியர்கள் கிரீஸ் மீது படை யெடுத்த பிறகு ஒலிம்பிக் விழாவுக்குத் துர திர்ஷ்டம் பிடித்தது. போட்டிகளில் மாசு படிந்து விட்டது.

ரோமானிய சீசர்களில் மிகவும் கொடுங் கோலனான நீரோ ஒரு சமயம் தேரோட்டும் போட்டியில் கலந்து கொண்டான். தேர் கவிழ்ந்து தேர் வெளியே எறியப்பட்டுப் போட்டியில் தோற்றுவிட்டாலும் கூட, நீரோவே வென்றதாகத் தீர்ப்பளிக்கப்பட் டது! இம்மாதிரி மோசடி செய்த நீரோ மேலும் பல பரிசுகளை வென்றான். இத்த கைய மனப்பான்மை ஒலிம்பிக் போட்டி களின் அழிவை விரைவாக்கியதில் வியப் பொன்றுமில்லை. அமைதியான நல்லெண்ணப் போட்டிக்குப் பதிலாக விளையாட்டரங்கு ஒரே போர்க்களமாகி விட்டது.

நிலைமை மோசமாகிக் கொண்டே வந்தது. கி. பி 39ல் ரோமானிய சக்கரவர்த்தி



**ஸி.ஆர்.ஏகாம்பரம்**

தியோடிஸியஸ் ஒலிம்பிக் விளையாட்டுக்களை நிரந்தரமாகத் தடை செய்து விட்டார்.

ஒலிம்பியாவின் இடிபாடுகளை அகழ்ந்தெடுத்த விஞ்ஞானிகளும், வரலாற்று வல்லுநர்களும் கட்டிடங்களோடு, ஒலிம்பியாவின் உணர்வையும், மாண்பையும் கூட வெளிக் கொணர்ந்து விட்டார்கள். ஒலிம்பியா உணர்வு புத்துயிர் பெற்ற பிறகு, ஒலிம்பிக் விழாவின் மறுமலர்ச்சிக்குப் பெரு முயற்சி செய்யப்பட்டது. 1859, 1870, 1875-ம் ஆண்டுகளில் கிரேக்கர்களும், 1889ம் ஆண்டில் பிரெஞ்சுக்காரர்களும் இந்தப் போட்டியை நடத்தினார்கள். துரதிர்ஷ்டவசமாக இவை தோற்றுப் போயின. இதற்கு முதல் காரணம் உலகம் மீண்டும் ஒலிம்பிக்கை ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கவில்லை என்பது. மற்றது அந்தச் சமயத்தில் கிரேக்கர்கள் ஓர் ஒலிம்பிக் விழாவை வெற்றிப் பலனுடனும் நடத்துவதற்கான வலிமையோ பொருள் வளமோ பெற்றிருக்கவில்லை என்பதாகும். 1859ம் ஆண்டு நடத்தப்பட்ட விழா, மிகுந்த குழப்பத்திலும் அமளியிலும் முடிந்தது. ஆனால் இதை நடத்துவதற்குப் பெரும் சக்தியாய் விளங்கிய ஜப்பாஸ் என்னும் கிரேக்கரே நவீன ஒலிம்பிக் விழாவுக்கு அடிக்கல் நாட்டியவர் என்று துணிந்து கூறலாம். கிரீஸில் ஒலிம்பிக்கை மீண்டும் தோற்றுவிப்பதற்குத் தமது திரண்ட செல்வம் முழுவதையும் அவர் விட்டுச் சென்றார்.

ஜப்பாஸ் விட்ட இடத்திலிருந்து பியர் தெ கூபர்டின் என்னும் பிரெஞ்சுக்காரர் தொடர்ந்தார்.

''ஒலிம்பியாவும், ஒலிம்பிக் போட்டிகளும் ஒரு நாகரிகத்தின் சின்னமாகும். நாடுகளையும், நகரங்களையும், ராணுவ வீரர்களையும், மாண்பு மிகு மதங்களையும் காட்டிலும் சிறப்பானவை இவை'' என்று கூபர்டின் எழுதினார். ''எல்லா விளையாட்டுக்களும் எல்லா நாடுகளும்'' என்று ஒலிம்பிக் விழாவின் குறிக்கோளைத் தந்தவரும் அவரே.

இந்த மறுமலர்ச்சிக்குப் பல மேற்கத்திய நாடுகள் மிகுந்த ஆர்வத்துடன் ஆதரவு அளித்தன. போட்டிகள் நடத்தும் முறை பற்றியும் உடன்பாடு ஏற்பட்டது. எகிப்து, இந்தியா, கிரீஸ், ரோம் ஆகியவற்றின் பண்டைக்காலப் போட்டிகளையும், இடைக்காலப் போட்டிகளான கத்திச் சண்டை, மல்யுத்தம், ஈட்டி எறிதல் போன்றவற்றையும், நவீன காலப் போட்டிகளையும் நடத்துவதென்று தீர்மானிக்கப்பட்டது.

கி. மு. 776ல் முதல் முதலாக நடந்த ஒலிம்பிக் விழாவில் தடப் பந்தயங்களே இடம் பெற்றன. ஆண்டுகள் செல்லச் செல்லப் போட்டிகளின் எண்ணிக்கை கூடியது. ஒரே நாள் நடைபெற்ற ஒலிம்பிக் விழா மூன்று நாட்களுக்கும், பிறகு ஒரு வாரமாகவும் வளர்ந்தது. ஒலிம்பிக் போட்டிகளிலேயே மிகவும் சிறப்பானதும், பிரமிப்பூட்டுவதுமான மாரதான் பந்தயம் அவற்றில் இடம் பெறவில்லை. இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில்தான் மைக்கேல் ப்ரீல் என்னும் பிரெஞ்சுக்காரரின் யோசனையின் பேரில் இந்தப் பந்தயம் சேர்த்துக் கொள்ளப்பட்டது. மாரதான் பற்றி எல்லோருக்கும் தெரிந்திருக்கக் கூடும். என்றாலும் ஒலிம்பிக் விழா பற்றிய இந்தக் கட்டுரையில் மீண்டும் சுருக்கமாகக் கூறுவது மிகையாகாது. சுமார் 26 மைல் அல்லது 42 கிலோமீட்டர் ஓட்டப் பந்தயமான மாரதான் புராதன ஒலிம்பிக் வீரன் பிடிப்பிடெஸ்ஸின் சாதனையின் நினைவாக நடத்தப்படுகிறது. பெர்ஸிய மன்னன் டேரியஸின் படைகளை எதிர்த்து மாரதானில் சண்டையிட்ட கிரேக்கர்களுக்கு அவசர உதவி கோரி, ஸ்பார்ட்டாவுக்கு ஓடிச் சென்று மீண்டும் மாரதானுக்கு ஓடிவந்தான் பிடிப்பிடெஸ். அவனுடைய இந்தச் சாதனை கிரீஸைக் காப்பாற்றியது. கிரேக்கர்களின் வெற்றியை ஓடிச் சென்று ஆதென்ஸில் அறிவித்து விட்டுத்தான் உயிர் துறந்தான் பிடிப்பிடெஸ்.

இப்போதைய ஒலிம்பிக்குகளில் மாரதான் பந்தயத்துக்குக் கடும் போட்டி இருக்கிறது. மனித சக்திக்கோர் உயரிய எடுத்துக்காட்டாகும் இந்த ஓட்டப் பந்தயம். மாரதான் பந்தயத்தின் களைப்பு சில ஓட்டக்காரர்களைக் கொன்றுவிடக் கூடும் என்று முதலாவது சர்வதேச ஒலிம்பிக் கமிட்டிக் கூட்டத்தில் அச்சம் தெரிவிக்கப்பட்டது. எதிர்பார்த்தது போலவே, ஸ்டாக்ஹோமில் நடந்த ஐந்தாவது ஒலிம்பிக் விழாவில் மாரதான் ஓட்டக்காரர் ஒருவர் உயிரிழந்து விட்டார்.

நவீன ஒலிம்பிக் விழா முதல் முதலாக 1896ம் ஆண்டில் ஆதென்ஸில் நடந்தது. அப்போது மாரதான் பந்தய நேரம்: 2 மணி 58 நிமிடம் 50 வினாடிகள். ஆனால் ரோமில் 1960ல் நடந்த விழாவில் எதியோபியாவைச் சேர்ந்த பிரபல ஓட்டக்காரர் அபிபே பிகிலா வெறும் காலுடன் ஓடியே இந்த நேரத்தில் 43 நிமிடம் 33.8 வினாடிகளைக் குறைத்துப் பிரமிக்கத் தக்க சாதனை ஒன்றை நிகழ்த்தினார். மேற்கத்தியரின் கடுமையான பயிற்சியே சிறந்த ஓட்டக்காரர்களைத் தோற்றுவிக்கும் என்ற தவறான கருத்தைக் காற்றில் பறக்க விட்டார் அபிபே. அபிபேயின் வியக்கத்தகு ஓட்டத்துக்கு அவரது சுற்றுப்புறச் சூழ்நிலையின் பங்கு என்ன என்பது பற்றிப் பல நாடுகளில் விஞ்ஞான ரீதியாக ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன!

நிகழ்காலத்துக்கு வருவோம்.

நவீன ஒலிம்பிக் விழாவில் டோக்கியோ விழா பதினெட்டாவதாகும். ஆதென்ஸில் புதிய ஒலிம்பிக் போட்டிகள் நடைபெறத் தொடங்கியதிலிருந்து இரண்டு உலகப் போர்கள் நடந்தபோதும் மூன்றே மூன்று ஒலிம்பிக்குகள்தாம் நடைபெறவில்லை. அமைதிக்கும், ஒலிம்பிக் விழாவுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு இதிலிருந்து புலப்படும். அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் வெளியே ஆசியாவில் நடைபெறும் ஒலிம்பிக்குகளில் டோக்கியோ விழாதான் முதன்மையானது. 1968 ஒலிம்பிக் மெக்ஸிகோவில் நடைபெறும்.

நவீன ஒலிம்பிக் விழா தொடங்கியபின், ஆகியுள்ள சுமார் எழுபது ஆண்டுகாலத்தில் ஏராளமான புதிய விளையாட்டுகள் இடம் பெற்றிருக்கின்றன. ஆதென்ஸ் விழாவில் பதினைந்து நாடுகளைச் சேர்ந்த 285 ஆட்டக்காரர்கள்

ஆம்; அவள் சகுந்தலா! ஆடையணிகளுக்கும் சட்டை களுக்குமான ப்ரிண்ட்கள்

ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ்—பருத்தித் துணிகளில் வாங்க லாபகரமானவை நீடித்துழைக்கும் பருத்தி ஃப்ராக்குகள், ப்ரிண்டட் புடவைகள், நாள் பூராவும் புதுமைப் பொலிவுடன் குளுகுளுப்பூட்டும் பாப்ளின் சட்டைகள்–இவற்றில் எது தேவையானாலும் ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ் என்று வற்புறுத்திக் கேட்டு வாங்குங்கள்.




**ராஜேஷ் டெக்ஸ்டைல்ஸ் மில்ஸ் லிட்.**

**பம்பாய்-13**



இது ஒரு ரோஹித் க்ரூப் ஸ்தாபனம்

BI-RH-I TAM

பங்கெடுத்துக் கொண்டார்கள். அப்போது தட, களப் பந்தயங்களும், நீச்சல் போட்டிகளும் மட்டுமே நடைபெற்றன. டோக்கியோவில் நூற்றுக்கும் அதிகமான நாடுகளைச் சேர்ந்த சுமார் ஏழாயிரம் ஆட்டக்காரர்கள் கலந்து கொள்ளுகிறார்கள்! போட்டிகளில், முதல் இரண்டாவது, மூன்றாவது இடம் பெறுவோருக்கு நூற்றைம்பதுக்கும் அதிகமான தங்கப் பதக்கங்களும் அதே எண்ணிக்கையில் வெள்ளி, வெண்கலப் பதக்கங்களும் வழங்கப்படும். இன, மத, நாடு அடிப்படையில் போட்டி கூடாதென்பது ஒலிம்பிக் கோட்பாடு. ஆண்களும் பெண்களும் தத்தம் போட்டிகளில் சரிநிகர் சமம். வெள்ளை, மஞ்சள், கறுப்பு நிறம் கொண்ட மக்கள் எல்லோருக்கும் போட்டிகளில் சம வாய்ப்புக்கள் உண்டு. பார்க்கப் போனால், தடப்பந்தயங்களில் அமெரிக்காவின் மாபெரும் வெற்றிகளுக்கு நீக்ரோக்களே முக்கிய காரணம்; ஜெஸ்ஸி ஓவன்ஸை யார் மறக்கமுடியும்?

ஒலிம்பிக் விழாக்களில் சாதனைகள் மேற்கு திசையிலிருந்து கிழக்குப் பக்கமாய்ச் சாயத் தொடங்கி இருக்கின்றன எனத் தோன்றுகிறது. 1952 ஹெல்சின்கி ஒலிம்பிக்கில் சோவியத் யூனியன் கலந்துகொண்ட பிறகு அமெரிக்காவின் தனிப் பெரும் சிறப்புக் குறைந்து விட்டது. ரோம் விழாவில் சோவியத் யூனியன் 43 தங்கப் பதக்கங்கள் உட்பட 103 பதக்கங்கள் பெற்று உச்சிக்குச் சென்றுவிட்டது. அமெரிக்காவுக்குக் கிடைத்தவை 71 பதக்கங்களே; இவற்றில் 34 தங்கப் பதக்கங்கள்.

தேச அடிப்படையில் போட்டிகள் நடக்கவில்லை என்றாலும் நிறையப் பதக்கங்கள் பெறும் நாட்டுக்குப் பெரும் கௌரவம் அளிக்கப்படுகிறது. முந்தைய புதிய ஒலிம்பிக்குகளில் அமெரிக்கர்களின் பெரும் சாதனைகள் கிரேக்கர்களுக்குப் பொறாமையை வளர்த்தன. ஸ்பிரிடோன் லவிஸ் எனும் கிரேக்க விவசாயி ஒருவர் பட்டினி கிடந்து, வழிபாடு செய்து, மாரதான் பந்தயத்தில் வென்று கிரேக்க அரசாங்கத்தின் நன்மதிப்பைப் பெற்ற பிறகுதான் நல்லெண்ணப் போட்டி மனப்பான்மை திரும்பியது.

தடைகளைச் சமாளிப்பதில் மனித சக்திக்கு ஒலிம்பிக் போட்டிகள் சவால் விடுகின்றன. அடுத்தடுத்த ஒலிம்பிக்குகளில் புத்தம் புதிய சாதனைகள் நிகழ்த்தப்படுவது இதை நிரூபிக்கிறது. டோக்கியோ விழாவிலும் திகைப்பூட்டும் சாதனைகள் பலவற்றை எதிர்பார்க்கலாம். கடந்த இரண்டு ஆண்டுகளில் நடந்த அதிகார பூர்வமற்ற பந்தயங்களில் உலக சாதனைகளில் எழுபது சதவிகிதம் மிஞ்சப்பட்டிருப்பது இந்த நம்பிக்கைக்கு வலுவளிக்கிறது. தட்டு எறிவது, இரும்புக் குண்டு வீசுவது போன்ற போட்டிகளில் சாதனைகள் கடந்த எழுபது ஆண்டுகளில் இரு மடங்காகி இருக்கின்றன. ஆனால் நூறு மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் 12 விநாடிகளிலிருந்து 10.2 விநாடிகளாக அதாவது 15 சதவிகிதமே குறைக்கப்பட்டிருக்கிறது. டோக்கியோவில் புதிய சாதனைகளையும், மேலும் திறமையான நிகழ்ச்சிகளையும் நாம் எதிர்பார்க்கலாம்.



டாக்டர்:-நர்ஸ்! நோயாளிகள் படிப்பதற்கும் புத்தகம் கேட்டால் பரலோக யாத்திரை, மோட்சவழி, முக்திப்பாதை, சொர்க்கக்கதவு புத்தகங்களையா தருவது? வளமான எதிர்காலம், மலர்ந்த வாழ்க்கை, இன்பப் பயணம் போன்ற புத்தகங்கள் இல்லையா?

இறுதியாக நம்மைப் பற்றிச் சில வார்த்தைகள் கூற வேண்டியிருக்கிறது.

தட, களப் பந்தயங்களில் சிறப்பானவர்களையும், ஹாக்கி, கால்பந்தாட்டக் கோஷ்டிகளில் மிகத் திறமையானவர்களையும் டோக்கியோவுக்கு நாம் நல் வாழ்த்துக்களுடன் அனுப்பி இருக்கிறோம். விளையாட்டு வீரர் கோஷ்டியின் தலைவர் குர்பசன் சிங்; ஹாக்கி கோஷ்டித் தலைவர், சரஞ்சித் ஒரு தேர்ந்த ஆட்டக்காரர். ஆயினும் நமது கவனத்தைக் கவருபவர், ஒலிம்பிக் விழாவில் அடுத்தடுத்து நான்காவது முறையாகக் கலந்துகொள்ளும் உதாம் சிங்தான். உலகப் புகழ் பெற்ற சீக்கிய ஓட்டக்காரர் மில்கா சிங் மூன்றாவது முறையாக ஒலிம்பிக்கில் கலந்து கொள்ளுகிறார். இதில் கலந்து கொள்ளும் ஒரே ஒரு பாரதப் பெண்மணி ஸ்டெபி டிஸௌஸா.

ஆயினும் டோக்கியோவில் நாம் பெருமளவு வெற்றியை எதிர்பார்க்கவில்லை என்பதைக் குறிப்பிடத்தான் வேண்டும். ஹாக்கித் தங்கப் பதக்கத்தைப் பாகிஸ்தானிடமிருந்து பெற்றுவிட்டால், அந்த ஆட்டத்துக்கு நமது ஆட்டங்களில் உரிய முதலிடத்தை மீண்டும் அளித்தவர்களாவோம்.

ரோமில் பாகிஸ்தானிடம் தோற்கும் போது முன்பு ஆறு முறை தொடர்ந்து ஒலிம்பிக்குகளில் நாம் வாகை சூடியது நினைவிருக்கலாம். நமது இப்போதைய கோஷ்டி இளமையானது எனினும் வெற்றி பெறும் திறமை அதற்கு உண்டு.

டோக்கியோவில் ஒலிம்பிக் சுடர் ஏற்றப்பட்டு விட்டது. பந்தயங்கள் நடைபெறும் நாட்கள் முழுதும் சுடர் ஒளிர்ந்து கொண்டிருக்கும். அறிவொளியையும், நேர்மையையும் ஒலிம்பிக் சுடர் குறிக்கிறது.

---




ஒரு மன நூல் ஆசிரியரின் குழந்தையாயிருப்பது மிக மிகக் கஷ்டமானது.

—டாம் மஸ்லான்

* * *

'குடும்பக் கட்டுப்பாடு' சம்பந்தமான புத்திமதிகளைக் கேட்டுக் கேட்டு அலுத்துப் போனவர்களுக்கு, ஒரு மாறுதல் வேண்டுமானால் அவர்கள் அடையாறு கிரீன்வேஸ் ரோடு வழியாகச் செல்வார்களாக!

அங்கே இந்தக் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு நேர் விரோதமான ஒரு விஷயம் அவர்கள் கண்ணில் படும்.

"....இனப் பெருக்கப் பண்ணை."

(இப்படி ஒரு பெரிய பலகையில் பெரிய எழுத்துக்களில் எழுதியிருக்கிறார்கள். அது ஒரு கோழி இனப் பெருக்கப் பண்ணை. ஆங்கிலத்தில் 'பௌல்ட்ரி பார்ம்' என்பதாகும்.)

'கண்டதும் காதல்' என்பது கோழி இனத்தில்தான் முதன் முதல் தோன்றியது என்று ஆராய்ச்சிக்காரர்கள் முடிவு கட்டுகிறார்கள். அவற்றினிடையே, பெண் பார்த்தல், எதிர் ஜாமீன், சீர்செனத்தி என்ற வழக்கங்கள் எல்லாம் இது வரையில் தலை காட்டக் காணோம். அவை கொடுத்து வைத்தவை! அயல்நாடுகளுக்குச் சென்று திரும்பிய கோழி நிபுணர்கள் அவற்றுக்குப் பண்ணையில் கலியாணம் செய்து வைத்துக் கொண்டிருப்பார்கள்!

இந்தப் பண்ணையைத் தேட யாரும் சிரமப்பட வேண்டியதேயில்லை. இது கர்நாடக சங்கீதக் கல்லூரிக்கு அடுத்தாற் போலவே இருக்கிறது. அந்தக் கல்லூரியில் சங்கீதக் குஞ்சுகள் உற்பத்தி செய்யப்படுகின்றன அல்லவா?

இந்த இரண்டு பண்ணைகளுக்குள்ளும் ஏதாவது தொடர்பு இருக்குமோ? சங்கீதத்தைக் கேட்கும் வாழை மரங்கள் இரண்டு மூன்று தார்கள் போடுகின்றன. பழந்தான் இனிமையாகிறது. ஆடு மாடுகள் இனி இன்னும்மேலே நிறையப் பால் கொடுக்கின்றன என்கிறார்கள். அது போன்று பக்கத்திலுள்ள கட்டடத்திலிருந்து வரும் சங்கீதப் பாடல்களைக் கேட்கும் கோழிகள் டஜன் கணக்கில் முட்டைகள் போடுமோ, என்னவோ?

அதே போன்று கோழிகளின் கொக்கரிப்பு சங்கீதத்தினால் மாணவ மாணவிகளின் சங்கீதமும் பாதிக்கப்படுமல்லவா?

'கோழி கூவப் பொழுது விடியும்' என்று டெக்ஸ்ட் புக் அங்கீகாரம் பெற்ற பால பாட புத்தகத்தில் போட்டிருக்கிறது. ஆகவே, கோழி கூவுவது, எப்படிப் பொழுதைப் பாதிக்கிறது என்பதைப் பற்றி ஓர் ஆராய்ச்சி செய்யலாம்!

* * *

சில சிறிய புத்தகக் கடைகளில் பார்த்திருப்பீர்கள். சோக்ரதர், முத்தத்தின் மர்மங்கள், சூரியஞானம், எமர்ஸனின் வியாசங்கள், பகவத்கீதை, முதலிரவு, பரமஹம்ஸரின் பேருரைகள், வாத்ஸாயனரின் காமசூத்திரம் (படங்களுடன்) புத்தபிரான் பொன் வாக்கு, சதிபதிகளின் உடலமைப்பும் மற்ற விவரங்களும் என்பது போன்ற புத்தகங்கள் மாற்றி மாற்றி அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். யாராவது வைத்தியக்கார வாலிபன், பரமஹம்ஸரின் பேருரைகள், புத்தர்பிரான் பொன் வாக்கு போன்ற புத்தகத்தையோ கூட வாங்கிச் செல்வதில் கடைக்காரருக்குச் சிறிதுகூட ஆட்சேபமில்லை.

நல்ல புத்தகங்களை விற்பதற்கும் இத்தகைய முறையைக் கையாளுகிறார்கள். சில வருஷங்கள் முன்னர் சென்னை மவுண்ட் ரோடில் ஒரு புத்தகக் கடையில் கிறிஸ்துவ மத சம்பந்தமான புத்தகங்கள், படங்கள் மட்டுமே வைத்திருந்தார்கள். இன்று அதில் காதல் நாவல்கள், துப்பறியும் நாவல்கள், விஞ்ஞானப் புத்தகங்கள், பள்ளிக்கூடப் பாட புத்தகங்கள் எல்லாம் நிறைந்திருக்கின்றன. நடு நடுவே, பைபிள், பரம பிதா, காப்பாற்றப்படுங்கள், கர்த்தர் என்பது போன்ற புத்தகங்கள் கண்ணில் படுகின்றன.

இந்த உத்தியை ஒரு கலையாகப் பின்பற்றுபவர்கள் கம்யூனிஸ்ட் புத்தகக் கடைக்காரர்கள். அவர்கள் கடைகளில் மற்றெந்தப் பெரிய நவீன புத்தகக் கடைகளிலும் உள்ள எல்லாப் புத்தகங்களும் இருக்கின்றன. விஞ்ஞானம், வியாபாரம் சம்பந்தப்பட்ட புத்தகங்கள் இருக்கின்றன. ரஷ்ய விஞ்ஞானப் புத்தகங்கள் மற்றெந்த நாட்டினரின் விஞ்ஞானப் புத்தகங்களுக்கும் எந்த விதத்திலும் தரத்தில் குறைந்தவை அல்ல. அத்துடன் விலையும் கொள்ளை மலிவு. 500, 600 பக்கங்கள் உள்ள புத்தகம் ஏழு எட்டு ரூபாய்க்குக் கிடைக்கும். ஆனால் இந்தக் கடைகளில் வேறு சில குறிப்பிட்ட புத்தகங்களும் நம் கண்ணில் படாமல் இராது. கார்ல் மார்க்ஸ், பிரடெரிக் எங்கெல்ஸ், லெனின், பிளெகானவ், கிமாபேல், குருஷேவ் முதலிய பல பெரிய புள்ளிகள் எழுதிய கம்யூனிஸக் கொள்கைப் பிரசாரப் புத்தகங்கள். இந்தப் புத்தகங்கள் சிலவற்றை விற்பதற்காகவே, மற்றும் ஆயிரக் கணக்கான புத்தகங்களையும் விற்றுத் தொலைக்கிறார்கள் என்று எண்ணும்படியாக இருக்கும்.

* * *

"ஹல்லோ! ஹல்லோ!"

ஒரு நாள் மாலை சென்னைக் கடற்கரை நடைபாதையில் சென்று கொண்டிருந்தபோது இப்படி யாரோ உரக்கக் கூப்பிடுவதைக் கேட்டுச் சத்தம் வந்த திசைப் பக்கம் நோக்கினேன்.

"கம் ஆன், கம் ஆன்" என்று மேலும் கூப்பிட்டார்கள்.

சர்வகலாசாலை பரீட்சை மண்டபத்திலிருந்து அந்த வார்த்தைகள் வந்து கொண்டிருந்தன — ஒரு திரைப்படப் பாட்டு ரிகார்டிலிருந்து. சர்வகலாசாலை அதிகாரிகள் அந்த மண்டபத்தைக் கலியாணங்களுக்காக வாடகைக்கு விட ஆரம்பித்து விட்டார்கள் போல் இருக்கிறது என்று சந்தேகப்பட்டுக் கட்டடத்தின் அருகில் சென்று பார்த்தேன். வாசலில் தொங்க விட்டிருந்த ஓர் அட்டையிலிருந்து அங்கே 'மன நூல் கண் காட்சி' நடக்கிறது

என்பது தெரிய வந்தது. அது செல்லே மன ஹால் சங்கத்தினர் நடத்தி வரும் நான்காவது ஆண்டுக் காட்சியாகும். நான் உள்ளே சென்று பார்த்தேன்.

ஒரு பெட்டிக்கு வெளியேயுள்ள ஒரு சிறு கண்ணாடி வழியாகப் பார்த்தால் உள்ளே ஒரு சிறிய பொம்மை ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருப்பதுபோல் தோன்றுகிறது. இன்னும் ஒரு கண்ணாடி வழியாகப் பார்த்தால் அது காணப்படவில்லை. பிறகு பெட்டிக்குள் பார்த்தால் அங்கே நாற்காலி கிடையாது. ஒரு மூலையில் ஒரு பொம்மை வைக்கப்பட்டிருக்கிறது; அவ்வளவுதான். கண்கள் எப்படி ஏமாற்றமடைகின்றன என்பதைக் காண்பிக்க இந்த வித்தை. இதே மாதிரி காது சம்பந்தமானவையாயும் இருந்தன.

ஓரிடத்தில் ஒரு சிறிய வெள்ளைச் சுண்டெலி சட்டங்களின் மேல் இருந்தது. அது சட்டத்தின் ஒரு கோடியில் வைக்கப்பட்டிருந்த உணவைத் தின்பதற்கு எப்படிப் போகும் என்பதைக் காண்பிக்கும் காட்சி. ஆனால் உணவு கைவசம் இல்லாததாலோ அல்லது வேறெதனாலோ அந்தச் சுண்டெலி உணவு தின்பதைக் காண்பிக்கவில்லை.

இன்னோர் இடத்தில் ஒரு கிராமபோன் பெட்டியும், இசைத் தட்டுகளும் இருந்தன. மனிதனது மனம் பலவிதமான சங்கீதத்தினால் பாதிக்கப்படுகிறது என்று தெரிவித்தார். ஆனால் தட்டுகளை வைத்துப் பாடச் செய்யவில்லை. ஏனென்றால் கிராமபோன் இயந்திரம் வேலை செய்யவில்லை.

இங்கே போலீஸ் இலாகாவின் காட்சியும் இருந்தது. கைவிரல் அடையாளங்கள்,– போலீஸ் நாய் குற்றவாளியைப் பிடிப்பது சம்பந்தமான படங்கள் இருந்தன. ஒரு பலகையில் பத்துப் பன்னிரண்டு பேருடைய படங்கள் ஒட்டப்பட்டிருந்தன. இவர்களுள் இரண்டு பேர்தான் குற்றவாளி. யார் குற்றவாளி என்று நாம் சொல்ல வேண்டும். விடை சரியா, தப்பா என்பதைக் கண்டு பிடிக்க அங்கிருந்த போலீஸ்காரர் ஒரு பொத்தானை அமுக்குவார். சரியாயிருந்தால் பச்சை வெளிச்சமும், தவறாயிருந்தால் சிவப்பு வெளிச்சமும் தோன்றும். ஆனால் பாட்டரி வேலை செய்யவில்லையாகையால் எல்லாவற்றையும் வாயாலேயே சொல்லி விட்டார்!

இப்படிப் பல அம்சங்கள் ஒரு காட்சியில் வேலை செய்யாததைப் பற்றி நினைத்துப் பார்த்த போது நான் வீட்டிலிருந்து புறப்பட்ட சகுனம் சரியாயிருந்திராது என்று எண்ணத் தோன்றியது. ஒரு வாலிபன் ஒரு ஸ்கூட்டரில் தன் மனைவியைப் பின்புறம் ஏற்றிக் கொண்டு எதிரே வந்தது ஞாபகம்!

இந்தக் காட்சிகளைக் காண்பதில் பல இளம் மாணவத் தொண்டர்கள் ஈடுபட்டிருந்தார்கள். அவர்களுள் ஒருவரை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அவருக்குத் தலையில் கட்டு மயிர் இருந்தது. அத்துடன் காதில் சிவப்புக் கல் கடுக்கன் போட்டிருந்தார். அப்படிக் காட்சியளிப்பதற்கு அவருக்கு அபார தேசாசார அபிமானமும், தைரியமும் இருக்க வேண்டுமல்லவா?

நான் வெளியே வருவதற்காக மண்டபத்தின் மாடிப் படிகளில் இறங்கிக் கொண்டிருந்தேன். அப்போது கணவனும் மனைவியுமான இருவர் பேசிக் கொண்டு போனார்கள்.

"மன நூல் என்றால் என்ன என்று புரிந்ததா?" என்று கணவன் கேட்டார்.

"புரிஞ்சுதே! பெட்டிக்குள் நாற்காலியில் பொம்மை உட்கார்ந்து கொண்டு இருக்கும் என்று நினைத்துக் கொண்டிருப்போம். ஆனால் இராது" என்றாள் அந்த அம்மாள்.

இந்தக் காட்சியை இன்னும் நல்ல முறையில் நடத்தியிருக்கலாமே என்று தோன்றியது. நுழைந்சன் வெளியே செல்வதற்காக, "ஸ்லீப் கெட் ஔட்!" என்று சொல்லும் இசைத் தட்டு ஒன்றும் பாடவில்லை. ஏனென்றால் ஒரு படத்திலும் அத்தகைய பாட்டை யாரும் இன்னும் பாடவில்லை. ஆனால் வேறு ஒரு பாட்டு காதில் விழுந்தது.

"அத்தை மகள் ரத்தினத்தை
அத்தான் மறந்தாரா?
அன்ன நடை, சின்ன இடை
......... ............. ............."

என்ற பாட்டு ரத்னம்தான்!

சர்வகலாசாலைப் பரீட்சை மண்டபமே! உனக்கு எனது அனுதாபங்கள்!

ஃ ஃ ஃ

புரட்டாசி சனிக்கிழமையன்று காலையில் வீட்டு வாசலில் சிலர் கோஷமிட்டுக் கொண்டு வந்தார்கள்:

"கோவிந்தா! கோவிந்தா! வடக்கு மலையானுக்கு ஒரு கோவிந்தா!"

வீட்டுக்காரர்: கொஞ்சம் இருங்கள். நான் அரிசி ரேஷன் கடைக்குப் போகப் போகிறேன். என் பின்னாலேயே நீங்கள் வந்ததும் அரிசி போடுகிறேன். அங்கே கிடைக்காவிட்டால் நானும் உங்களோடு வருகிறேன்!

ஃ ஃ ஃ

ஒரு குறிப்பிட்ட விளம்பரம் ஆரம்ப விழா, திறப்பு விழா, அங்குரார்ப்பண விழா சம்பந்தப்பட்டது என்று பார்த்த மாத்திரத்திலேயே தெரிந்துகொள்ளச் செய்வதற்கு ஒரு யோசனை கூற விரும்புகிறேன். அதை நீங்களே கூடச் சொல்லக் கூடும். 'திறப்பு விழாக்களுக்கு அழுகு மந்திரிகளால் திறந்து வைக்கப்படுதல்' என்று நிலைமை ஏற்பட்டிருக்கிறது. மந்திரிகள் அநேகமாக வாட்டசாட்டமாக, பருமனாக (பிரதம மந்திரி லால் பகதூர் ஜியையும், நந்தாஜியையும் போன்ற சிலரைத் தவிர) இருக்கிறார்கள். பெரிய வயிறுள்ள தொப்பையையும், தலைப்பாவையும் தரித்திருக்கும் உருவத்தைப் போட



லாம். முகம் மமதையையும் திருப்தியையும் செயற்கைச் சிரிப்பையும் காண்பிப்பதாக அமையலாம். இந்த உருவப் படமுள்ள விளம்பரம் ஏதோ ஒன்றின் திறப்பு விழா சம்பந்தப்பட்டது என்று தானாகவே தம்பட்டம் கொட்டிக் கொள்ளுமே. —என். ஆர்.

# குரு தட்சிணை



[ ஒரு பாழ் மண்டபம். அதன் பக்கத்தில் வெள்ளை உடை தரித்த ஓர் ஆள் வீற்றிருக்கிறான். வயது சுமார் நாற்பது இருக்கும். தாடி வளர்த்திருக்கிறான். அவன் எதிரில் சுமார் அவன் வயதே மதிக்கத் தக்க சுந்தரம் நின்று கொண்டிருக்கிறான்.]

சுந்தரம்: என்னைத் தெரியவில்லையா, மோகன்? இல்லை, என்னை மறந்து விட்டாயா?

அவன்: நீ யார் அப்பனே?

சுந்தரம்: என்னப்பா மோகன், ஒன்றுமே தெரியாதவன்போல் பேசுகிறாய்?

அவன்: அப்பனே! என் பெயர் மோகன் அல்லவே. என்னை வேறு யார் என்றோ தவறாக நினைத்துப் பேசுகிறாய்.

சுந்தரம்: அந்தக் கதையை வேறு யாரிடமாவது சொல். பால்யத்திலிருந்து உன்னோடு பழகிய உன் சிநேகிதனாயிற்றே நான். தாடியை வளர்த்துக் கொண்ட மாத்திரத்தில் என்னை ஏமாற்றிவிடலாம் என்று நினைக்கிறாயா?

அவன்: எனக்குப் பால்யத்தில் உன்னைப் போன்ற சிநேகிதர்கள் யாருமே இருந்ததில்லையே.

சுந்தரம்: பார்த்தாயா! இன்னும் சாதிக்கிறாயே. உன் மனைவிக்கும் உனக்கும் பெரிய தகராறு ஏற்பட்டது. அதனால்...

அவன்: எனக்கு விவாகமே ஆகவில்லையே?

சுந்தரம்: ஏது! முதலில் உன்னை மோகன் இல்லை என்று சொன்னாய். பிறகு என்னை உன் சிநேகிதன் என்று ஒப்புக்கொள்ள மறுத்து விட்டாய். இப்போது உனக்கு மனைவியே இல்லை என்கிறாய். மோகன் நீ...

அவன்: மறுபடியும் சொல்கிறேன். என் பெயர் மோகன் இல்லை. என்னை சத்ய பிரகாச சுவேதாம்பர ஸ்வாமி என்பார்கள்.

சுந்தரம்: சந்யாசம் வாங்கிக் கொண்ட பிறகு இந்தப் பெயரை நீ வைத்துக்கொண்டிருக்கலாம். உன் பூர்வாசிரமப் பெயர் மோகன்தானே?

அவன்: பூர்வாசிரமத்தில் என்னைச் சத்தியம் என்று அழைத்தார்கள். துறவியான பிறகு பிரகாசத்தைக் கண்டதால் சத்யப் பிரகாசம் ஆனேன். துறவி போல் காவியுடை தரிக்காமல் வெள்ளை ஆடைகளை அணிவதால் சுவேதாம்பரம் என்ற பெயர் வந்தது. அதனால் நீ நினைக்கும் மோகன் நான் அல்ல.

சுந்தரம்: என்னப்பா நீ! உன் மனைவிக்கு நிறையப் பணம் வரப் போகிறது என்று நினைத்து அவளை மணந்தாய். உன் மாமனார் கடன்காரனாகித் தற்கொலை செய்து கொண்டபோது உன் மனைவியால் உனக்கு ஒன்றும் கிடைக்காது என்று தெரிந்து கொண்டு அவளோடு சண்டை போட்டு, வீட்டை விட்டே ஓடி விட்டாய். இப்போது என்னிடத்தில் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறாய்.

அவன்: அப்பனே! எனக்குப் பூசணிக்காய் பிடிக்காது. மேலும் சோறு சாப்பிடும் பழக்கம் எனக்கு இல்லை. நான் ரொட்டி தின்பவன். அதனால் பூசணிக்காயை நான் எப்படிச் சோற்றில் மறைக்க முடியும்?

சுந்தரம்: இனி நீ என்ன சொன்னாலும் நான் நம்பவே மாட்டேன். பழைய ஞாபகப் பேச்சு உன்னையும் அறியாமல் உன்னைக் காட்டிக் கொடுத்து விட்டது. நீ மோகன்தான். வா வீட்டுக்கு.

அவன்: இதென்னடா, ரகசாரம்!

சுந்தரம்: ரகசாரம் இல்லை மோகன். சம்சாரம் அழைக்கிறது.

அவன்: அபசாரம்! அபசாரம்!!

சுந்தரம்: மோகன், மரியாதையாக வீட்டுக்கு வராவிட்டால் தமயந்தியை இங்கு அழைத்து வந்து விடுவேன்.

அவன்: யாரது தமயந்தி!

சுந்தரம்: உன் மனைவி! சரிதான் வாப்பா: உன்னுடைய மனைவி தமயந்தியைத் தெரியாதென்கிறாயே.

[ முப்பது வயதான மாலா வருகிறாள். அவள் அணிந்திருந்த நகைகளிலிருந்து அவள் ஒரு பணக்காரப் பெண் என்று தெரிகிறது. நேராகவந்து சுந்தரத்துக்கு எதிர்ப்புறம் நின்று, உட்கார்ந்திருக்கும் சத்தியப்பிரகாசத்தைக் கூர்ந்து கவனிக்கிறாள். ]

மாலா: ரவி! ரவி!!

அவன்: அப்பனே, யாரோ உம்மைக் கூப்பிடுகிறார்கள்.

மாலா: அவரா ரவி? அவர் யாரென்றே எனக்குத் தெரியாதே! நான் உங்களையல்லவா கூப்பிட்டேன்.

அவன்: என்னையா!

மாலா: ஆமாம், ரவி.

அவன்: நீங்கள்தான் தமயந்தியா?

மாலா: யாரது தமயந்தி? என்ன ரவி, உங்களுக்கு இந்த உலக நினைவே யில்லையா? என் பெயர் மாலா என்பதைக் கூட மறந்து போய் விட்டீர்களா?

மாலா: ரவி! என் தகப்பனார் பிடிவாதஞ் செய்ததால் நான் முரளியை மணக்கிறேன் என்று சொல்ல வேண்டியதாயிற்று. அதைக் கேட்டதும் நீங்கள் என் முகத்தில் விழிக்க மாட்டேன் என்று சத்தியம் செய்துவிட்டுப் போய் விட்டீர்கள். என் மனம் உங்களையே நாடியது. என் தகப்பனாரிடம் வாதாடி முரளியை மணக்க முடியாதென்று சொல்லி விட்டேன். இதுவரையில் உங்களுக்காகவே காத்திருக்கிறேன்.

சுந்தரம்: இவனுக்குத்தான் ஏற்கனவே கல்யாணம் ஆகி யிருக்கிறதே.



# தோட்டக்கார விசுவநாதன்

அவன்: நீங்கள் ஏதோ தவறுதலாக நினைக்கிறீர்கள். என் பெயர் ரவியல்ல அம்மணி.

சுந்தரம்: இவர் பெயர் மோகன்.

அவன்: என் பெயர் மோகனுமல்ல.

மாலா: என்ன ரவி, என்மேல் உள்ள கோபத்திலுல் நீங்கள் இப்படி என்னை மறந்து விட்டதுபோல் நடிப்பது முறையா?

அவன்: நீங்கள் யார் என்றே எனக்குத் தெரியாது. உங்கள்மேல் எனக்கு என்ன அம்மணி கோபம்?

மாலா: நாம் இருவரும் காதலித்தபோது...

அவன் (திடுக்கிட்டவனைப் போல்): காதலித்தோமா? அம்மணி!

சுந்தரம்: சரிதான். நீ தமயந்தியை விட்டு விட்டுப் போனதன் காரணம் இப்போது தான் தெரிகிறது.

அவன்: அப்பனே! இந்த அம்மணியை நான் பார்த்ததேயில்லை.

"அப்படி யிருந்தும் இவனை எப்படி நீங்கள் காதலித்தீர்கள்?

மாலா: ரவி! என்ன இது? உங்களுக்குக் கல்யாணம் ஆகி விட்டதா? ஏன் ரவி, நான் சொன்னதைக் கேட்டுப் பொறுக்காமல் வேறு யாரையாவது மணந்து விட்டீர்களா?

அவன்: இது என்ன சங்கடம்? உங்களை யார் என்றே எனக்குத் தெரியாதே.

சுந்தரம்: இவனைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாதென்று எப்போது சொன்னீர்கள்?

மாலா: சுமார் இரண்டு வருடங்களுக்கு முன்பு.

சுந்தரம்:, இவன் தமயந்தியை மணந்து ஏழு வருடங்களுக்கு மேல் ஆகிறது.

மாலா: யார் இந்தத் தமயந்தி?

அவன்: நளனின் அருமை மனைவியாம்! இவர் சொல்கிறார்.

சுந்தரம்: இவன் மனைவிதான். பணக்காரி என்று நினைத்து அவளை மணந்தான். பணமில்லை என்று தெரிந்ததும் விட்டை விட்டே ஓடி விட்டான்.

மாலா: அடப் பாவி! தனக்குக் கல்யாணமே ஆகவில்லை என்று சாதித்தாரே!

அவன்: அம்மணி!

மாலா: அம்மணியாவது சிம்மணியாவது! ....ரவி!

சுந்தரம்: இவன் பெயர் மோகன்:

அவன்: என் பெயர் சத்திய பிரகாச கவே தாம்பரம்.

மாலா: இல்லை; பித்தலாட்டப் பிரகாச புளுகாம்பரம்னு சொல்லுங்கள். என்ன நடிப்பு நடித்தீர்கள். உங்கள் உண்மைப் பெயரை மறைத்து....

அவன்: அம்மணி! உண்மையாகச் சொல்கிறேன். நீங்கள் நினைக்கும் ரவி நான் அல்ல.

மாலா (கண்ணீர் உகுத்துக் கோபமாக): உங்களை தம்பி முரளியையும் மணக்க மாட்டேன் என்று சொல்லி உங்களுக்காகக் காத்திருந்தேனே. இப்போது என்னுடைய கதி என்ன ஆவது?

சுந்தரம்: உங்களுக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை. வேறு யாரையாவது மணந்து கொள்ளலாம். இவன் தாலி கட்டிய தமயந்தியின் கதி என்ன ஆவது?

மாலா: ரவி! உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்று என்னிடம் ஏன் சொல்லாமல் மறைத்தீர்கள்?

சுந்தரம்: அந்தக் கதையை ஏன் கேட்கிறீர்கள்? தனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதென்று தமயந்தியிடம் மட்டும் சொன்னானா?

மாலா: அப்படியென்றால் தமயந்தியை மணம் செய்து கொள்ளும்போதே இவருக்கு இன்னொரு மனைவி இருந்தாளா?

சுந்தரம்: ஆமாம். கல்யாணத்தன்று இவன் முதல் மனைவி சகுந்தலாவும் அவள் தகப்பனும் வந்து சண்டை போட்டார்கள்.

மாலா: இந்தத் துஷ்யந்தன் சகுந்தலையின் நினைவே இல்லையென்றாரா?

சுந்தரம்: ஆமாம். தான் யாரோ அவள் யாரோ என்று ஒரேயடியாய்ச் சாதித்தான். கடைசியில் ஒருவாறு அவர்களைச் சமாதானம் செய்து அனுப்பினோம்.

அவன்: அப்பனே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்றே எனக்கு விளங்கவில்லை. நான் மோகனும் அல்ல, ரவியும் அல்ல. என் பெயர் சத்தியப் பிரகாசம்.

[ சப்-இன்ஸ்பெக்டர் ஒருவர் மிடுக்காக வந்து சத்யப்பிரகாசத்தின் முன் நிற்கிறார். தம் கையில் இருக்கும் தடியால் அவன் முதுகில் இலேசாகத் தட்டுகிறார்.]

சப்-இன்ஸ்பெக்டர் (அதிகாரத் தோரணையாக): டேய், முனியா, எழுந்திருடா.

அவன் (திகைத்தபடி): யாரைக் கூப்பிடுகிறீர்கள் ஐயா!

சப் இன்ஸ்: சந்தேகம் வரக்கூடாது என்று தானே முதலில் தட்டினேன். இதென்னடா தாடி? என்னை ஏமாற்றுவதற்குத் தாடி வளர்த்தால் மட்டும் போதாது. நீ எந்த வேஷம் போட்டாலும் என்னிடமிருந்து தப்பிவிட முடியாது.

அவன்: அப்பனே!

சப் இன்ஸ்: சரிதாண்டா கப்பனே! நடடா ஸ்டேஷனுக்கு.

அவன்: தாங்கள் என்னை யாரோ என்று நினைத்து...

சப் இன்ஸ்: யாரோ என்று நினைக்கவில்லை. நீ எடுத்த அவதாரங்கள் ஒவ்வொன்றையும் புரிந்து கொண்டுதான் உன்னை ஸ்டேஷனுக்கு அழைக்கிறேன். 1955—60ல் முனிசாமி என்ற பெயரில் கள்ளக்கடத்தலில் ஈடுபட்டிருந்தாய். 60—62ல் ராமசாமி என்ற பெயரில் காட்டன் மார்க்கெட்டில் விளையாடினாய். பிறகு கோபாலசாமியாக மாறி 1963 வரை சினிமாப் பட முதலாளியாகி ஒரு சினிமாத் தாரகையை உள்ளாக்கித் தப்பித்துப் போனாய். போன ஏப்ரல் மாதம் ஒரு திருட்டு வழக்கில் மாட்டிக் கொண்டு ஜாமீனில் விடுதலையாகித் தப்பி ஓடி விட்டாய். உன்னை வலை போட்டுத் தேடினேன். வசமாக இப்போது மாட்டிக் கொண்டாய்.

சுந்தரம்: இன்ஸ்பெக்டர் ஸார்! 55—60ல் இவன் தன் மனைவி தமயந்தியோடு ஒழுங்காகக் குடித்தனம் செய்து கொண்டிருந்தான்.

மாலா: ஆமாம் இன்ஸ்பெக்டர் சார், 60-62ல் இவர் என்னுடைய வீட்டு கதி என்று கிடந்தார்.

அவன்: பார்த்தீர்களா, அதனால் நீங்கள் நினைக்கும் ஆள் நான் இல்லை, ஐயனே!

சுந்தரம்: அப்படியென்றால் தமயந்தியோடு குடித்தனம் நடத்தியதை ஒப்புக் கொள்கிறாயா?

அவன்: இல்லை; எனக்கு உங்கள் யாரையுமே தெரியாது. நீங்கள் அனைவரும் என்னை வேறு யார் என்றோ நினைக்கிறீர்கள். என் பெயர் சத்தியப் பிரகாசம்.

இன்ஸ்: முகத்திலே சத்தியத்துக்குப் பதிலாகப் பொய்தான் பிரகாசிக்கிறது. உம், நடடா ஸ்டேஷனுக்கு! டேய், முனிசாமி! உனக்குத்தான் சொல்வது.

சுந்தரம்: இவன் பெயர் மோகன் ஸார்! வெகு காலம் இவனோடு பழகியிருக்கிறேன்.

மாலா: இல்லை சார், இவர் பெயர் ரவி.

இன்ஸ்: பல இடங்களில் பல பெயர்களில் உலவியிருக்கிறான் இவன். நட ஸ்டேஷனுக்கு.

அவன்: ஐயனே! உலகத்தைத் துறந்த எனக்கு ஏனய்யா இந்தச் சோதனை?

இன்ஸ்: யாரைக் கேட்கிறாய்? உலகத்தைத் துறந்தவனுக்கு எல்லா இடமும் ஒன்றுதானே, ஸ்டேஷனுக்கு வரலாமே!

[ ஐம்பது வயதுடைய ஒரு சாமியார் வருகிறார். கையில் கமண்டலம், காவி உடை, சாந்தம் தவழும் புன்னகை பூத்த முகம்.]

சாமியார்: சிவலோகம், சச்சிதானந்தம்!

[ இன்ஸ்பெக்டர் அவர் வருகையைக் காண்கிறார். அதிவிநயமாக நின்று அவரைக் கும்பிடுகிறார்.]

இன்ஸ்: வாருங்கள் ஸ்வாமிஜி. (சத்தியப் பிரகாசத்தின் பக்கம் திரும்பி) டேய் எழுந்திருடா, திருட்டுப் பயலே!

சாமி: குழந்தாய், இவர் யார்? இவரை ஏன் வம்பு செய்கிறாய்?

இன்ஸ்: இவன் ஒரு பெரிய கேடி ஸ்வாமி. பல பெயர்களில் பலரை ஏமாற்றியிருக்கிறான்.

# நிச்சயமாகத் தெரியுமா?

ஆம், கவர்ச்சி மிக்கவள்தான். அழகான ஆடை அணிந்திருக்கிறாள்; படிப்பிலும் சுறுசுறுப்பானவள்தான். ஆனால் எளிதில் ஏற்றுக் கொள்ளப்படக் கூடியவள்தானா என்பது நிச்சயமாகத் தெரியுமா?

உடலில் துர்நாற்றம் வீசும் கிருமிகளை உங்களும் தவிர்க்க முடியாது. ஆனால் வழக்கமாக சிந்தால் உபயோகித்து அவைகளை அழித்து விடலாம். இந்தியாவில் அற்புதக் கிருமிநாசினி ஜி-11* கொண்ட ஒரே சோப் இதுதான். லட்சக்கணக்கான மக்கள் உபயோகித்து, பரிசீலனை செய்யப்பட்டது. உன்னுடைய பிரபல்யம் பெரிதும் அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

மகிழ்ச்சியூட்டும்; நறுமணம் பொருந்திய சிந்தால் சருமத்தைக் கறைப்படுத்தும் கிருமிகளைக் கூட அழித்து விடும். அதனால் மேனி மாசற்று விளங்கும்.



நிச்சயமான பாதுகாப்பிற்கு
குழந்தைகளை சிந்தால் சோப் கொண்டு நீராட்டி, துர்நாற்றம் போக்கும் இனிய மணம் கமழும், இதமான ஜி-11 அடங்கிய சிந்தால் டால்கம் பவுடரைத் தூவித் தடவுங்கள்

* எஸ். கிவாடன் அண்டு கம்பெனியின் ட்ரேட் மார்க்

* விவரமான "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு கோத்ரெஜ், பம்பாய்-12", என்ற விலாசத்திற்கு எழுதுங்கள்.

வியர்வை நாற்றத்தைப் போக்கி எழிலுடன் விளங்கச் செய்யும் சோப்




Godrej கோத்ரெஜ் சோப்புகளில் முதன்மையான பெயர்

CT. 10A. TAM.

இப்போது தாடி வளர்த்து வேடம் போட்டு என்னை ஏமாற்றப் பார்க்கிறான். ஆனால் என் னிடமா நடக்கும்?

அவன்: அப்பனே! என் பேச்சில் உனக்கு நம்பிக்கை இல்லை. அதனால் பரவாயில்லை: வா, செல்வோம். ஆண்டவன் இருக்கிறார்.

சாமி: குழந்தாய், இவரிடத்தில் தவறு செய்கிறாய் என்று நினைக்கிறேன்.

இன்ஸ்: சுவாமி!, என்னை உங்களுக்கு எத் தனை வருடங்களாகத் தெரியும்? எப்போதா வது காரணம் இல்லாமல் நான் யாரை யாவது தண்டனைக்குள்ளாக்கியதுண்டா? பிரமோஷனுக்காக வழக்கை ஜோடித்து நிரபராதிகளைத் தண்டிக்கக் கூடாது என்று தாங்கள் எடுத்துச் சொன்னதை மறந்து விட்டேன் என்று நினைக்கிறீர்களா?

சாமி: கொஞ்சம் இரு. (சத்தியப் பிர காசத்தைப் பார்த்து) ஐயனே, தாங்கள் யார்?

அவன்: நான் யார்!...., உம்!...... நான் யார் என்றே எனக்குத் தெரியவில்லை. இப் போது என்னையும் மறந்த ஒரு நிலையில் இருக் கிறேன். நான் யார் என்ற ஆராய்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறேன்.

[ இதைக் கேட்ட ஸ்வாமிஜி சத்யப் பிரகாசத்தின் முன்பு சாஷ்டாங்க மாக நமஸ்கரிக்கிறார். சுந்தர், மாலா, இன்ஸ்பெக்டர் ஆகிய மூவரும் இந்தச் செய்கையைக் கண்டு திகைப்பு அடைகிறார்கள்.]

சாமி: ஸ்வாமி! தாங்கள்தான் என் குரு நாதர். உலகத்தைத் துறந்துவிட்ட மாத் திரத்தில் என்னை ஒரு பெரிய ஞானி என்று எண்ணி அகந்தையாலே இறுமாந்திருந்தேன். உலகத்தைத் துறந்தும், மமதையைத் துறக் காது தவித்தேன். இன்றுதான் உண்மை புரிந்தது. நான் யார் என்ற ஆராய்ச்சி யில் ஈடுபட வேண்டுமென்று சொல்லாமல் சொன்ன தங்கள் பொன்மொழிகளை நான் குருவின் உபதேசமாகக் கொள்கிறேன். உங்கள் அடக்கத்தைக் கண்டு என் மமதை குன்றி விட்டது. தங்களையும் மறந்த நிலை யில் இருந்து நான் யார் என்பதைப் பற்றி ஒவ்வொருவரும் ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்று காட்டிக்காட்டி என்னை உய்ய வைத்து விட்டீர்கள்.

இன்ஸ்: சுவாமி! என்ன இது? இவன் ஒரு பெரிய கேடி!

சாமி: அபசாரம்! இவர் முற்றும் துறந்த ஞானி! என் குருநாதரை வணங்கி, ஜன்ம சாபல்யம் எய்துங்கள்.

சுந்தரம்: என்னை மன்னிக்க வேண்டும், குருதேவா.

[ சத்தியப்பிரகாசத்தின் காலில் விழுகிறான்.]

அவர் (சுந்தரைத் தழுவியபடி): யார் யாரை மன்னிப்பது!

இன்ஸ்பெக்டர் (அவர் காலில் விழுந்து): என்னையும் மன்னிக்க வேண்டும் ஸ்வாமி.

அவர் (இன்ஸ்பெக்டரை எழுப்பியபடி): தவறு நடப்பது சகஜம்!

மாலா (அவரை வணங்கியபடி): ஸ்வாமி! உங்களைத் தவறாகப் புரிந்து கொண்டதற்கு மன்னிக்க வேண்டும்.

அவர் (அவள் தலையைத் வருடியபடி): குழந்தாய்! யாரும் யாரையும் சரியாகப் புரிந்துகொள்வது கடினம்தான்.

காட்சி முடிவு

[ இடம்: பாழ் மண்டபத்தை ஒட்டிய தெரு. சுந்தரம், மாலா, இன்ஸ் பெக்டர், சாமியார் அனைவரும் பேசிக் கொண்டே வருகிறார்கள்.]

சாமி: நான் மட்டும் வராமல் இருந் தால் பெருத்த அபசாரம் நேர்ந்திருக்கும்.

இன்ஸ்: எனக்கென்னவோ. இன்னும் நம்பிக்கை ஏற்படவில்லை ஸ்வாமி.

சாமி: உஸ்ஸ்ஸ்! மறுபடியும் அபசார மாகப் பேசாதே!

சுந்தரம்: ஸ்வாமி! எனக்கும் நம்பிக்கை ஏற்பட மாட்டேன் என்கிறது. என் வீட் டுக்கு வாருங்கள். இவன்... அதாவது இவர் போட்டோ இருக்கிறது. இவர் தாடியை எடுத்துவிட்டால் போட்டோவுக்கும், இவ னுக்....இவருக்கும் வித்தியாசமே இருக்காது!

மாலா: என்னிடமும் இவர் போட்டோ இருக்கிறது.

சாமி: இவர் பெரிய ஞானி அம்மணி! இவருக்கு நான் இன்று பிட்சை தர நினைக் கிறேன். (சுந்தரத்தைப் பார்த்து) குழந்தாய்; ஒரு ரூபாய் தருகிறேன். போய்ப் பாலும் பழமும் வாங்கி வருவாயா?

[ அவர் தம் கமண்டலத்தில் கையை விட்டுத் தேடியவர் ஆச்சரியமாகப் பார்க்கிறார். ]

இன்ஸ்: என்ன சுவாமி, அப்படிப் பார்க் கிறீர்கள்?

சாமி: கமண்டலத்தில் ஐந்து ரூபாய்த் தாள் ஒன்று வைத்திருந்தேன். காணவில்லை!

சுந்தரம்: அதனால் என்ன? நான் பணம் போட்டு வாங்கி வருகிறேன். உங்களுக்கும் ஏதாவது தேவையானால்...

[ சுந்தரம் தன் சட்டைப் பையில் இருக்கும் மணி பர்ஸைத் தேட அதைக் காணாது விழிக்கிறான்.]

சுந்தரம்: என் பர்ஸைக் காணவில்லை. பத்து ரூபாய் கோவிந்தா!

இன்ஸ் (தன் ஜேபியைப் பார்த்து): ஐயோ என் பாக்கெட் வாட்சைக் காணுமே!

மாலா (தன் இடையைத் தடவிப் பார்த்த படி): ஐயய்யோ! என் இருகுவில்லை எங்கே?

இன்ஸ்: நாம் அவனை விழுந்து வணங் கும்போது நம்மைக் கட்டித் தழுவுவது போல் நம் பொருள்களைத் தட்டிக்கொண்டு போய்விட்டான்! வாருங்கள், போவோம்.

சுந்தரம்: எங்கே?

இன்ஸ்: மண்டபத்துக்கு.

சுந்தரம்: பாருங்கள். அவன் இருந்த இடம் காலி. அங்கே ஆள் இல்லை.

மாலா: நீங்கள் பரவாயில்லை. ஐந்து ரூபாய், பத்து ரூபாய், பாக்கெட் வாட்ச் அளவோடு விட்டார். என்னிடமிருந்து இருநூறு ரூபாய் மதிப்புள்ள இருகுவில்லையை யல்லவா அவர் குருதட்சிணையாக எடுத்துக் கொண்டு விட்டார்!

இன்ஸ்: வாருங்கள், தேடிப் பார்ப்போம்.

[ அனைவரும் பாழ் மண்டபத்தை நோக்கி விரைகிறார்கள்.]

### அத்தியாயம் அறுபத்தொன்று

## கடைசிக் கடமை

# குண்டு மல்லிகை

அரு. ராமநாதன்

உமா தன் வீட்டில், சுவர் மாடத்துப் பிள்ளையாரின் முன்னால் குத்து விளக்கு ஏற்றி வைத்துக் கும்பிட்டாள். அவளுடைய அந்தச் சின்னப் பிள்ளையாரிடம் பிச்சுமணி ஒரு வரம் கேட்டிருக்கிறான் என்பதை நினைத்த போது, அவரை ஏறிட்டுப் பார்க்கவே உமாவுக்குச் சங்கடமாக இருந்தது.

பிள்ளையாரோ சிரித்துக் கொண்டே இருந்தார்!

அப்போது, "டீச்சரக்கா, டீச்சரக்கா!" என்று தெருவிலிருந்து எதிர் வீட்டுப் பையன் கூவிக் கொண்டே ஓடி வந்து, "டீச்சரக்கா! உங்கள் வீட்டு வாசற்படியில் யாரோ ஒருவர் விழுந்து கிடக்கிறார்!" என்று பயங்கரப் பிரமையுடன் சொன்னான்.

நெஞ்சு பதற உமா வெளியே விரைந்து சென்று பார்த்தாள். தெருவில் குழந்தைகளின் கூச்சல்களோடு ஒரு சிறு கும்பல் கூடி நின்றது. உமாவின் வீட்டு வாசற்படியில் ஒரு கிழவரின் உடல் அசைவற்றுக் கிடந்தது. அது பிச்சுமணியின் தாத்தாதான்! அவர் வாசற்படியில் ஏறும் போது கால் இடறி விழுந்திருக்கிறார் என்பதற்கு அடையாளமாக ஆங்காங்கே சிராய்ப்புக் காயங்கள் தென்பட்டன. தலையிலும் பலமாக அடிபட்டிருக்குமாகையால், அப்படியே அவர் மூர்ச்சித்து விட்டாரென்று தோன்றியது.

அவருடைய பருத்த உடலை உமாவும் எதிர் வீட்டுப் பையனும் மற்றும் சில ஆட்களுமாகச் சேர்ந்து தூக்கி உமாவின் வீட்டுக்குள் கொண்டு வந்து கூடத்தில் கிடத்தினார்கள். இந்த எதிர்பாராத நிகழ்ச்சியினால் மலைத்து நின்ற உமாவின் நெஞ்சில், சுற்றியிருந்தவர்களின் பயங்கள் கொடூரமாகக் குவிந்து கனத்தன. ஆனாலும் அவள் தன் பதற்றத்தை அடக்கிக் கொண்டு நிதானமாக நிலைமையைச் சமாளிக்க முயன்றாள். டாக்டர் ஜகந்நாதனுக்கு டெலிபோன் செய்து தகவல் தெரிவிக்கும்படி எதிர் வீட்டுப் பையனை விரட்டினாள். உடனே ஒரு டாக்ஸி கொண்டு வரும்படி இன்னொர் ஆளை அனுப்பினாள். கிழவருக்கும் அவசரகால முதலுதவிச் சிகிச்சைகளைச் செய்யலானாள்.

அதன் விளைவாக மேஜர் ராமதுரையின் இறுகிய உதடுகள் இலேசாகப்பிரிந்து அலைவுறும் ஒரு பெருமூச்சு எழும்பியது.

மேஜர் ராமதுரையின் மங்கிய கண்கள் இலேசாகத் திறந்து எதிரே வெறித்து நோக்கின. சில கணங்கள் கழித்து அவருக்குச் சிறிது சுய நினைவு வந்து எதிரே உமாவின் பரிவு ததும்பும் முகம் தென்பட்டதும், அவருடைய உடம்பிலும் குரலிலும் ஒரு புத்துணர்ச்சியும் பழைய தெம்பும் பொங்கி எழுந்தன. அவருடைய மூச்சு இறைப்புகளும் ஸ்திரமற்ற தன்மை நீங்கி ஒழுங்குபடலாயின.

அவர் உமாவை ஒரு முறை நன்றாக உற்றுப் பார்த்து விட்டு, "நீதான் டீச்சரம்மா உமா, இல்லையா?" என்று கேட்டார். பிறகு சிறிது மூச்சு வாங்கி மறுபடியும் தம் பலத்தைத் திரட்டிக் கொண்டு மெல்லத் தலையைத் தூக்கி, "உன்னுடன் நான் தனியாகப் பேச வேண்டும். மற்றவர்களையெல்லாம் அப்பால் போகச் சொல்லு" என்று கட்டளையிட்டார்.

மற்றவர்களெல்லாம் அப்பால்போனதும் மேஜர் ஒரு முறை உமாவின் கண்களை விசித்திரமாக ஊடுருவிப் பார்த்து விட்டு, "என் பேரன் பிச்சுமணியைக் கல்யாணம் செய்து கொள்ள மறுத்த பெண் நீதானே?" என்று ஆணித்தரமாகக் கேட்டார்.

இந்த எதிர்பாராத கேள்வியால் உமா அதிர்ந்து போனாள்.

"நீ பிச்சுமணியை ஏற்றுக் கொள்ள மறுத்தாயா?" என்று மேஜர் மீண்டும் கேட்டார் எரிச்சலாக.

"ஆமாம்!" என்று தலையாட்டிய உமாவுக்கு முகமெல்லாம் ரத்தம் போல் சிவந்தது. மேஜரின் ஊசிமுனை போன்ற பார்வையைத் தாங்க முடியாமல் அவள் நெளிந்தவளாக, "ஆனால்.... ஆனால்...." என்று மேலும் ஏதோ சொல்ல முயன்றாள்.

"அதனாலென்ன? நீ பிச்சுமணியோடு பேசிப் பழகினாய்! நீ இல்லாமல் அவனுக்கு







வாழ்க்கையே இல்லை என்று அவன் நினைக்கிற அளவு நெருங்கிப் பழகுவதற்கு இடம் கொடுத்தாய்! பிறகு அவன் உன்னைக் கலியாணம் செய்து கொள்ளத் தயாராக வந்த போது அவனைப் புறக்கணித்து அனுப்பினாயாமே? அதன் காரணம் எனக்குத் தெரிய வேண்டும்!" என்று கிழவர் முழங்கினார். அவருடைய கடைசி மூச்சு வரை அந்தக் கம்பீரமும் ஏகாதிபத்தியத் தன்மையும் கொடி கட்டிப் பறக்கும் என்பதையே அது பறைசாற்றியது.

உமா தயங்கினாள். "நாம் அதைப் பற்றி இப்போது பேச வேண்டாம்! அதுவும் நீங்கள் இருக்கிற நிலையில்...."

"இப்போதே அதைப் பற்றி நாம் பேசித்தான் ஆக வேண்டும்! இப்போது என் பேரனின் விஷயம்தான் என்னைவிடப் பெரிது! அதை நீ முதலில் புரிந்து கொள்!" என்றார் மேஜர் அழுத்தமாக. அது உமாவின் நெஞ்சை நெகிழச் செய்தது.

கிழவர் தம் பலஹீனத்தைத் தம்முடைய இரும்புத்தனமான நெஞ்சுரத்தால் சமாளித்துக் கொண்டு, "உன் நோக்கம்தான் என்ன? பெரிய இடத்துப் பெண்கள்கூட இது மாதிரிக் கல்யா

ணத்துக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் என் பேரனைச் சட்டென்று பிடித்துக் கொண்டு விடுவார்கள். நீயோ அதற்கு நேர்மாறாக நடந்திருக்கிறாய்! அவனுடைய தொடர்பையும் திடீரென அறுத்துக் கொள்ளத் தீர்மானித்திருக்கிறாய்! அது ஏன்? ஒரு வேளை என் சம்மதமில்லாமல் அவன் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டால் அவன் சொத்து சுகங்கள் இல்லாமல் கஷ்டப்படுவான் என்று நினைத்தாயா?'' என்று கேட்டார்.

''இல்லை!'' என்றாள் உமா.

''பின்னே என்ன காரணம்? என் பேரனிடம் நீ என்ன குறைதான் கண்டாய்? ஒரு வேளை அவன் அசட்டுத்தனமாக உன்னிடம் ஏதாவது கண்ணியமில்லாமலும், முரட்டுத்தனமாகவும் நடந்து கொண்டானா? அதனால் அவனைத் தள்ளி விட்டாயா?''

உமாவுக்கு உடம்பெல்லாம் கூசியது. ''இல்லை! இல்லை!'' என்று வேகமாகத் தலையாட்டிய அவள், ''உங்கள் பேரனுக்கு அப்படியெல்லாம் நடந்து கொள்ளத் தெரியாது. எப்போதுமே நல்ல சுபாவம் உண்டு! அது எனக்குத் தெரியும்!'' என்றாள் பரிதாபமாக.

''பின்னே அவனைக் கல்யாணம் செய்து கொள்ள நீ ஏன் மறுக்கிறாய்? அவ்வளவு தூரத்திற்கு அவனை உனக்குப் பிடிக்க வில்லையா? அவன் உன் மீது அளவிலாத ஆசை வைத்திருக்கிறான். அந்த அளவு நீயும் அவன் மீது ஆசை வைக்க முடியவில்லையா? உன் வீட்டில் ஒரு சின்னப் பிள்ளையார் வைத்திருக்கிறாயாமே, அந்தப் பிள்ளையாரின் சாட்சியாக உன் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் சொல்! நீ பிச்சுமணியை உள்ளூறக் காதலிக்கவில்லையா?'' என்று கிழவர் உருக்கமாகக் கேட்டபடி உமாவின் கண்களை ஊடுருவிப் பார்க்க முயன்றார்.

உமா தன் கண்களை வேறுபுறம் திருப்பிக் கொண்டாள். அவளையும் மீறி அவளுடைய கண்கள் கலங்கின.

''ம்! மனம் திறந்து பேசு!'' என்று மேஜர் முடுக்கினார்.

உமா தலை குனிந்து நின்றபடியே தழுதழுக்கும் குரலில், ''உங்கள் பேரனின் வயசுக்கு ஏற்ற சின்னப் பெண்ணாக நான் இருந்திருந்தால், எனக்கு ஏற்கனவே ஒரு கல்யாணம் நிச்சயமாகி அது பாதியிலேயே நின்று போகாமல் இருந்திருந்தால், ஒரு வேளை உங்கள் பேரனைக் கல்யாணம் செய்து கொள்ள நான் சம்மதித்திருப்பேன்! ஆனால்... ஆனால்..... நானோ வயதில் இரண்டு வருஷம் பெரியவள். ஏற்கனவே ஒரு முறை மணப் பெண்ணாக அலங்கரிக்கப் பட்டு மனமுடைந்து போய்க் கல்யாணம் என்றாலே ஒரு துர்க்கனவாக மறந்து விட முயல்பவள். வாழ்க்கையின் சுவைகளை யெல்லாம் இழந்தவள். இனி கல்யாணம் என்ற நினைப்பிற்கே இடங் கொடாமல் அமைதியாக வாழ முயல்பவள். எனக்குக் குடும்ப வாழ்க்கை என்பது எப்போதோ முடிந்து போய் விட்ட கதை! இத்தகைய ஒருத்தியை உங்கள் பேரன் தன் வாழ்க்கைத் துணைவியாக அடைவது சரிதானா என்று என் மனசுக்குப் படவில்லை. உங்கள் பேரனை என்னால் சந்தோஷப்படுத்த முடியுமா என்பதும் எனக்குத் தெரியவில்லை. கன்னிப் பெண்ணின் முதற் காதலை என்னால் தரவும் முடியாது. ஆகவே அதிக இளமையும் அதிக உற்சாகமும் உள்ள உணர்ச்சிகரமான ஒரு புத்தினம் பெண்ணையே உங்கள் பேரன் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டு அதிகமான சந்தோஷத்தை அனுபவிக்கவேண்டும் என்று நினைத்தேன். உங்கள் பேரன் தன் வயதிற்கும் அந்தஸ்திற்கும் பொருத்தமான ஒரு பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமே தவிர என்னைப் போன்ற ஒருத்தியை மறந்துவிட வேண்டும் என்று கூறி அனுப்பினேன்!'' என்று சொல்லிவிட்டுத் தன்னையும் மீறிப் பொங்கும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு தனக்கே இயல்பான தன்னடக்கத்துக்காகத் தன் மனத்துக்குள்ளேயே போராடலானாள்.

அவளை மேஜர் கூர்ந்து நோக்கியபடி, ''ம்! பிச்சுமணி அதிக சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இன்னொரு பெண்ணை அவன் மணந்து கொள்ள வேண்டும் என்று நீ நினைத்தாயா? அப்படியானால் அவ்வளவு தூரத்திற்கு அவன் மீது அன்பும் அக்கறையும் உனக்கு இருக்கிறது. அவ்வளவு தூரத்திற்கு ஆழ்ந்த காதல் அவன் மீது உனக்கு உள்ளூற இருக்கிறது, இல்லையா?'' என்று உமாவின் இருதயத்தையே அவளுக்கு எடுத்துக் காட்டுவது போல் கேட்டார்.

அவருடைய கடினமான கண்களில் முதன் முதலாகக் கருணை பிறந்தது. அவர் பரிவுடன் உமாவை நோக்கி, ''என் பேரனை நீ கல்யாணம் செய்து கொள்ளா விட்டால் அதைவிடப் பைத்தியக்காரத்தனம், அதைவிட அசட்டுத்தனம் வேறு எதுவும் இராது! நீ அவன் மீது ஆழ்ந்த அன்பு வைத்திருக்கிறாய். வாழ்நாள் முழுதும் அவனை நீ நன்

## குட்டிக்கதை

ரயில் தடத்தை ஒட்டிய சிற்றூர் அது. அங்கே ஒரு மாதா கோவில். அந்த மாதா கோவில் பாதிரியாருக்கு மிகவும் பிடித்தமான விஷயம், மாலை வேளையில், அந்த ஊர் ஸ்டேஷனில் நிற்காமல் அதைக் கடந்து வேகமாகச் செல்லும் எக்ஸ்பிரஸ் ரயிலைப் பார்ப்பதுதான். அடாது மழை பெய்தாலும், விடாது பனி கொட்டினாலும், பாதிப் பிரசங்கம் நடக்கும் வேளையாக இருந்தாலும்கூட அவர் ரயில் தடத்துக்கு அருகே ஓடி வந்து, நின்று அந்த எக்ஸ்பிரஸ் காற்றாய்ப் பறந்து ஓடிக் கண் பார்வையிலிருந்து மறைவதைக் கண்டு ரசிப்பார்.

அந்தனை வயது முதிர்ந்தவரிடம் இருக்கும் இந்த வழக்கம் ஏதோ பைத்தியக்காரத்தனமான செயல் போல் சிலருக்குத் தோன்றியது. ஒரு நாள் அவரிடம் இதைப் பற்றிக் கேட்டே விட்டார்கள்.

''நான் உங்களுக்கு நீதி போதனை செய்கிறேன். ஞாயிற்றுக்கிழமை பள்ளியில் பாடம் சொல்லித் தருகிறேன். நீங்கள் ஆரம்பிக்கும் தர்மப் பணி ஒவ்வொன்றுக்கும் தலைமை தாங்கி நடத்தித் தருகிறேன். கல்யாணம் செய்து வைக்கிறேன். கடைசிக் காலச் சடங்கும் நடத்தித் தருகிறேன்! ஆனால் அந்த எக்ஸ்பிரஸ் வண்டி ஒன்றுதான், என் உதவியையும் முயற்சியையும் நாடாமல் இந்த ஊர் வழியே, நான் பிடித்துத் தள்ள வேண்டிய அவசியமில்லாமல் ஓடுகிறது. அப்படி ஒரு நிகழ்ச்சியைப் பார்ப்பதில் எனக்கு மகிழ்ச்சி இருக்காதா?'' என்றார் பாதிரியார்.

கேட்டவர்கள் முகம் காற்றுப் போன பலூனாகச் சுருங்கியது.

---

னாகக் கவனித்து, அவனுக்கு வேண்டியதையெல்லாம் செய்து, அவனை எப்போதும் சந்தோஷமாக வைத்திருப்பாய்! வயதில் இரண்டு வருஷங்கள் மூத்தவள் என்பதையும்பொருட்படுத்த வேண்டியதில்லை. குறும்புக்காரிகளும், கர்விகளுமான சிறு வயதுக்காரிகளைவிட, அடம் பிடிக்கும் அசட்டுப் பெண்களைவிட நீதான் பிச்சுமணியை மிகச் சந்தோஷமாக வைத்திருப்பாய். உன்னைப் போல் அடக்கமும், நிதானமும்; உலக அறிவும், ஆழ்ந்த பற்றுதலும் உள்ள ஒரு பெண்தான் என் பேரனுக்குத் தேவை!'' என்றார். அவருடைய அழுத்தமான அந்தக் குரலில் ஓர் ஆழ்ந்த அர்த்தமும் அதோடு ஓர் ஏக்கமும் தொனித்து உமாவின் நெஞ்சில் பரிதாபத்தைக் கிளறியது.

''உங்கள் பேரனை நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று நீங்கள் உண்மையிலேயே விரும்புகிறீர்களா?'' என்று உமா குரல் அடைக்க வியப்புடன் கேட்டாள்.

''விரும்புகிறேனா? நீ இல்லாமல் பிச்சுமணி வாழவே மாட்டான். அப்படியே அவன் வாழ்ந்தாலும் வாழ்க்கையில் ஒரு சுவையையும் காண மாட்டான். அது எனக்குத் தெரியும்! முன்பெல்லாம் என் பேரனுக்கு என் அன்பு ஒன்றே போதும் என்று நினைத்திருந்தேன். ஆனால் அந்த நினைப்பு சுத்தப் பைத்தியக்காரத்தனம் என்பது இப்போதுதான் எனக்கும் புரிகிறது. அவனுடைய வாழ்க்கையை இனி ஒரு பெண்ணின் அன்பால்தான் மலர்விக்கவோ நிறைவிக்கவோ முடியும்! கவனமாகக் கேள். அவனோ சின்னவன். உலகம் தெரியாத வெகுளிப் பையன். அவன் கூடிய சீக்கிரம் தன்னந் தனி ஆளாகி விடுவான்! இளமை வயதுள்ளவன் தன்னந் தனியனாக இருக்கக் கூடாது. அவனைக் கவனித்துக் கொள்ள ஒரு பெண் துணை தேவை! அதற்குத் தகுதியான பெண் உன்னைவிட வேறு எவளுமில்லை!'' என்று மேஜர் ராமதுரை சடசட வென்று கூறினார்.

உமா குழம்பினாள். பிறகு அவள், ''என்னால் முடியாது! அது என்னால் முடியாது!'' என்று சொல்லி விட்டுத் தன் உதட்டைப் பல்லால் கடித்துக் கொண்டாள்.

''நீ நினைத்தால் முடியும்! நீ அவன் மீது வைத்திருக்கும் அன்பே அவனைச் சந்தோஷப்படுத்த முடியும்!'' என்ற மேஜரின் குரல் பரிதாபமாகத் தழுதழுத்தது.

உமா பதில் சொல்லவில்லை.

கிழவருக்கு மூச்சிறைப்புகள் அலைப்புற்று மறுபடியும் பலஹீனம் அதிகமாக உடம்பில் ஆட்கொள்ளத் தொடங்கியது. தள்ளாமையினால் அவருக்கு மறுபடியும் மயக்கம் வந்து விடுமோ அல்லது அவருடைய இருதயத் துடிப்பு அப்படியே நின்று விடுமோ என்றுகூடத் தோன்றியது. அதற்குள் கிழவர் ஏதோ சொல்லி விடத் துடிப்பவர் போல் தலையைப் பலவந்தமாகத் தூக்கி மிகவும் சிரமப்பட்டுக் குரலில் ஒரு பலத்தை வரவழைத்துக்கொண்டு, ''என் கடமைகளை யெல்லாம் செய்து விட்டேன்! கடைசியாக என் பேரனுக்கு நான்செய்ய வேண்டிய முக்கியமான ஒரு கடமையையும் இப்போது செய்து விடுகிறேன். நான் இந்த உலகத்தை விட்டுப் போவதற்கு முன்னால் என் பேரனைத் தகுதியான ஒரு பெண்ணிடம் ஒப்படைத்து விட்டுத்தான் போக வேண்டும். ஆகவே இப்போதே என் பேரனின் வாழ்க்கையை

உன் கையில் ஒப்படைத்து விடுகிறேன்!" என்றார் மிகவும் பரிதாபமாக.

உமா பதில் சொல்லவில்லை.

கிழவரின் கண்களில் நீர் துளித்தது. தம் மானாபிமானங்களை யெல்லாம் விட்டு விட்டு உமாவிடம் ஏதோ பிச்சை கேட்பவர் போல், "என் பேரனை ஏற்றுக் கொண்டு அவன் வாழ்க்கையைச் சந்தோஷப்படுத்துவாயா? என்னுடைய இந்தக் கடைசி விருப்பத்தை நிறைவேற்றுவாயா? நிறைவேற்றுவதாக வாக்குக் கொடு!" என்று கெஞ்சினார்.

உமாவுக்கு என்ன பதில் சொல்வதென்றே புரியவில்லை. தர்மசங்கடமான அந்த நிலைமையை ஒரு புன்முறுவலால் சமாளிக்க முயன்றாள்.

ஆனால் கிழவரோ அந்தப் புன்முறுவலையே அவளுடைய வாக்குறுதியாகக் கருதிக் கொண்டு அவளுடைய பரிவு ததும்பும் முகத்தை ஆழ்ந்து ஒரு முறை பார்த்து விட்டு "நீ எனக்கு வாக்குக் கொடுத்து விட்டாய்! என் பேரனை ஏற்றுக் கொள்வாய்! நீ ஏற்றுக் கொள்வாய்!" என்று உணர்ச்சியின் உச்சஸ்தாயியில் கூவியவராய் அப்படியே மூர்ச்சித்து விழுந்துவிட்டார்.

உமா பதறினாள்.

நல்ல வேளை; கிழவருக்குச் சுய நினைவுதான் முற்றிலும் தவறிவிட்டதே தவிர, மூச்சு அடங்கிவிடவில்லை.

அதே சமயம் டாக்டர் ஜகந்நாதன் தம் மருந்துப் பெட்டியோடு வந்து சேர்ந்தார். அவரிடம் கிழவரை ஒப்படைத்து அவருடைய காரிலேயே கிழவரின் உடலை ஏற்றி அனுப்பியபிறகு உமா ஒரு பெருமூச்சு விட்டாள்.

ஆனாலும் அன்றிரவு முழுவதும் அவளால் தூங்கவே முடியவில்லை. என்னென்னவோ யோசனைகள்! என்னென்னவோ பயங்கள்! அவற்றினிடையே கிழவரது கடைசிக்கால விருப்பமும் அவர் கேட்ட வாக்குறுதியும் கொக்கிகள் போல் சதா சுழன்று வந்து உமாவைப் பிடித்திழுத்து அவளை ஏதோ ஒரு புது உலகத்திற்குத் தூக்கிக் கொண்டுபோக முயன்றன. பெரும் புயல், இடிமழைகளுக்குப் பிறகு தோன்றும் சூரிய வெளிச்சம் போல் பிச்சுமணியின் முகம் வேறு அவளுடைய இதயத்தின் ஒரு புறத்தில் அடிக்கடி தோன்றியது.

அவளால் ஒரு முடிவுமே செய்ய முடியவில்லை. காலைப் பொழுது விடியும் வரை கண்ணிமைகளை இறுக்கி மூடிக் கொள்ளவும் முடியவில்லை.

**ம**றுநாள் காலை ஆறரை மணிக்கு உமாவின் வீட்டுக்கு டாக்டர் ஜகந்நாதன் பறந்து வந்து உமாவை அவசரமாக அழைத்துக் கொண்டு பிச்சுமணியின் பங்களாவை நோக்கி அதிவேகமாகத் தம் காரை ஓட்டிச் சென்றார்.

உமாவின் முகத்தில் ஈயாடவில்லை. ஏதோ ஒரு பயத்தால் அவளுடைய முகம் விநாடிக்கு விநாடி அதிகமாக வெளுத்துக் கொண்டேயிருந்தது.

"உமா! நம் பிச்சுமணியின் தாத்தாவிற்கு இன்னும் சுயநினைவு திரும்பவில்லை. நேற்று இரவிலிருந்து அப்படியே பிரக்ஞையற்றுக் கிடக்கிறார். சுய உணர்வு திரும்பாமலே அவர் காலமாகிவிடுவாரோ என்று அங்கே எல்லோரும் கலங்குகிறார்கள். அதனால் கடைசி முயற்சியான ஓர் ஊசியையும் அவருடைய உடம்பில் போட்டுவிட்டேன். உயிரை மேலும் சில மணி நேரங்கள் பிடித்து வைத்துக்கொண்டிருக்க அந்த ஊசி உதவுமே தவிர காலதேவனை எதிர்த்து வெல்ல எந்த ஊசிக்கும் சக்தி இல்லை. அநேகமாக இன்று மத்தியானத்திற்குள் கிழவரின் கதை முடிந்துவிடும்!" என்று ஜகந்நாதன் கூறினார்.

உமா தன் நெற்றியை அழுத்தித் தலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். கண்ணீர் பொங்கியது.

"பெரியவருக்குத் தம்முடைய ஆயுள் நேற்றோ இன்றோ முடிந்துவிடப் போகிறது என்று முன்கூட்டியே தெரிந்திருக்கிறது. டாக்டர்களையும் முந்திக்கொண்டு எமதர்மராஜன் அத்தகைய முன்னறிவிப்பை நல்லவர்களுக்கு எப்படியோ வழங்கிவிடுகிறான். அதன் மூலம் கடைசிக் கடமைகளைச் செய்வதற்கும் அவகாசம் அளிக்கிறான். கிழவர் இந்த உலகத்தை விட்டுப் போவதற்கு முன்னால் தம் பேரனை ஒரு நல்ல பெண்ணின் கையில் ஒப்படைக்க வேண்டுமெனத் தத்தளித்திருக்கிறார்" என்று ஜகந்நாதன் கூறி நிறுத்தினார். உமாவின் இருதயத்தில் கிழவரின் பரிதாபகரமான முகம் வந்து நின்று கனத்தது. (தொடரும்)

### யார் போக்கிரி ?

பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் தலைமை நீதிபதியாக இருந்த ஜெப்பரீஸ் மிகக் கடுமையான தண்டனையை விதிக்கும் கர்வம் படைத்தவர். ஒரு நாள் அவர் தம் கைப் பிரம்பால் கைதியைச் சுட்டிக் காட்டி, "என் பிரம்பின் கோடியில் ஒரு போக்கிரி இருக்கிறான்" என்றார். உடனே கைதி, "பிரபு! எந்தக் கோடியில்?" என்று கேட்டதும் அவரது ஆணவம் அடங்கியது.



நீங்கள் அப்படிச்
சொல்லமாட்டீர்கள்...
ஆனால் அவள் சருமத்தில் ஏதோ
குறையுள்ளது!

நீங்கள் அப்படி
எண்ணமாட்டீர்கள்...
ஆனால் இப்பொழுது
அக்குறை நீங்கிவிட்டது!

அதைப்பற்றி நீங்கள் அறிந்திருக்க நியாயமில்லை. அத்தனை நுட்பமாக, துல்லியமாக அதை மறைத்திருக்கிறது இலேசான, லாவண்யமான லாக்டோ-காலமைன்! குறை எதுவாயினும் சாமர்த்தியமாக மறைக்கவல்ல மழமழப்பான இப்பவுடர் தளம்... உங்கள் மேனியெழிற்கு மேன்மை அளிக்கிறது.

# லாக்டோ-காலமைன் மறைப்பதோடு, குறை நீங்கவும் உதவுகிறது!

ஆம், லாக்டோ-காலமைனின் சாதனை தான், துரிதமாய் வேலை செய்யும். உயர்தர காலமைனிலிருந்து விசேஷமாய்த் தயாரிக்கப்பட்ட இப் பவுடர் மற்றெந்த தளங்களையும்விடச் சிறப்பாய் உங்கள் சருமத்துக்குப் பணிபுரிகிறது...குறைகளை மறைப்பதுடன் அவை நீங்கவும் உதவுகிறது. சடுதியில், இதமுடன் தொல்லைகளைத் தீர்க்கிறது லாக்டோ-காலமைன்...நீங்கள் என்றும் விரும்பும் தெளிவான, ஒளி விசும் மேனியெழிலை அது உங்களுக்கு வழங்குகிறது.

சருமக் கோளாறுகள், வெயில், அனல்காற்று ஆகியவற்றால் கன்றும் சருமம், சிசுக்களுக்கு வரும் அரிப்பு ஆகியவற்றுக்கும் அனுகுணமானது லாக்டோ-காலமைன்.

லாக்டோ-காலமைன் வரிசையில் மேலும் கிடைப்பவை: லோஷன், க்ரீம், டால்கம். எங்கும் கிடைக்கிறது.

**லாக்டோ-காலமைன்—உங்கள் ஒப்பற்ற எழிலின் அடித்தளம்.**




க்ருக்ஸ் இன்டர்ஃரான் லிமிடெட், பம்பாய்-18.

BI-CI-6 TAM

# சௌந்தர்ய லட்சியம்

## வாசவன்

காட்சி – 1

[ பொன்னி வளநாட்டுப் புகழ் சோழன் ராஜேந்திரன், தன் செல்வப் புதல்வி அம்மங்கா தேவியின் அந்தப்புரம் நோக்கி வருகிறான். நிலா மாடத்தில் அமர்ந்திருந்த அம்மங்கா விண்ணை நோக்கிக் கண்ணையும் கருத்தையும் செலுத்தி யிருக்கிறாள்.]

ராஜேந்திரன்: அம்மங்கா தேவி...

அம்மங்காதேவி (திடுக்குற்றுத் திரும்பி): அப்பா!...

ராஜேந்: விண்ணிலே எத்தனை வெள்ளி மீன்கள் முளைத்திருக்கின்றன என்பதை எண்ணி விட்டாயா குமாரி!

அம்மங்கா: எண்ணிவிட்டேன் அப்பா!... தமிழ் நாட்டு அரச குமாரர்களை விட அவை அதிகம் இல்லை!

ராஜேந்: அதிருக்கட்டும்! கொங்கு நாட்டு இளவரசன் குலசேகரன் வந்திருக்கிறான்.

அம்மங்கா: மகிழ்ச்சிக்குரிய செய்தி! முதலில் அவனைச் சாப்பிடச் சொல்லுங்கள்.

ராஜேந்: சரி. பிறகு?

அம்மங்கா: நம் அரண்மனை அலங்காரங்களையெல்லாம் அவனுக்குக் காண்பியுங்கள்.

ராஜேந்: அதற்கப்புறம்?

அம்மங்கா: அரசாங்க மரியாதைகளுடன் அவனை ஊருக்கு அனுப்பி வையுங்கள்.

ராஜேந்: அம்மங்கா! உன்னை மணம் புரிந்துகொள்ள வரும் அத்தனை அரச குமாரர்களையும் இப்படியே தள்ளி விடுவாயானால்....

அம்மங்கா: 'திங்களேர் பெற வளர்' ராஜேந்திரச் சோழச் சக்கரவர்த்திகளுக்குப் பேச வேறு விஷயமே கிடைக்கவில்லையா? பல் நூல் ஆய்ந்திட்ட பண்டித சோழனப்பா நீங்கள்! நூலைப்பற்றி ஆயிரம் பேசலாமே?

ராஜேந்: இப்பொழுதும் நான் 'திருமணம்' என்கிற மங்கள நூலைப் பற்றித் தானே பேசிக் கொண்டிருக்கிறேன்?

அம்மங்கா: நீங்கள் இதையே பேசுவதானால் எப்பொழுதுமே ஏமாற்றம்தான் அடைவீர்கள்!

ராஜேந்: எனக்கு ஒருவிதத்தில் ஏமாற்றம்தான்! ஆனால் அரச வம்சத்து இளவரசர்கள் அத்தனை பேருக்குமல்லவா ஏமாற்றமாகிவிட்டது?

அம்மங்கா: யார் வேண்டுமானாலும் ஏமாந்து போகட்டும்! அதற்காக நான் திருமணம் புரிந்து கொள்ளப் போவதில்லை. ஒருவேளை அது நிகழ்வதாக இருந்தாலும் அரச குடும்பத்தில் பிறந்த ஆண் ஜன்மங்களை நான் ஏறெடுத்தும் பார்க்க மாட்டேன்!

ராஜேந்திரன்: ஏன்?

அம்மங்கா: அரசகுமாரர்களின் அந்தப்புரத்தில் அலங்காரப் பதுமைகளுள் ஒன்றாகக் கொலுவிருக்க நான் ஆசைப்படவில்லை.

ராஜேந்: என்ன! ஓர் அரசனின் பட்டமகிஷியாக இருப்பதில் எத்தனை ஆனந்தம் உண்டு என்பதை எண்ணிப் பார்த்தாயா?

அம்மங்கா: காமக்கிழத்தியர் பொய்யுறவில் கணவனை ஒப்புவித்துவிட்டு, இரவு பகலாகக் கண்ணீரைப் பெருக்குகிற பட்டமகிஷிப் பதவியின் ஆனந்தம் வேண்டாம்.

ராஜேந்: ராஜகுமாரர்களில் ராமனைப் போல் ஏகபத்தினி விரதம் உடையவர்கள் இல்லையேயில்லையா?

அம்மங்கா: ஏன் இருக்க மாட்டார்கள்? ஒவ்வொரு ராஜகுமாரனுக்கும் கைகேயியைப் போல ஒரு மாற்றுந் தாய் இருந்து, பட்டத்தையும், பதவியையும் பறித்துக் கொண்டு காட்டுக்கு ஓட்டி விடுவார்களேயானால் அத்தனை பேரும் ஏகபத்தினி விரதர்களாகத்தான் இருப்பார்கள்!

ராஜேந் (அயர்வுடன்): அப்புறம் என்னதான் உன் முடிவு?

அம்மங்கா: 'கடிமணம்' என்ற பெயரில் நான் கண்ணீர்க் குளத்தில் குளிக்க விருப்பப்படவில்லை, அப்பா!

ராஜேந்: ஒரு மகளுக்குப் பிதா செய்ய வேண்டிய கடமையில் ராஜேந்திர சோழன் பிழைபட்டு விட்டான் என்ற பெரும் பழியை என்மீது நீ சுமத்த விரும்பினால், உன் முடிவு எப்படியோ இருந்து விட்டுப் போகட்டும்.

அம்மங்கா: ராஜேந்திர சோழர் கவின் கலைகள் பலவற்றை வளர்த்திருக்கிறார். தென் திரைக் கடாரம் கொண்டார். 'நெடிதியல் ஊழியுள் இடைதுறை நாடும் தொடர்வன வேலிப் படர்வனவாசியும் சுள்ளிச் சூழ் மதில் கொள்ளிப் பாக்கையும் நண்ணரு முரண மண்ணைக் கடக்கமும்' வென்ற வீரர் ராஜேந்திரர். கங்கையின் திரை வீசும் எல்லைவரை சென்று, களம் பல கண்டு, கங்கையில் வெற்றி நீராடிய கங்கை கொண்ட சோழர். 'கங்கை கொண்ட சோழேச்சரம்' என்னும் வானுயர் கோயில் சமைத்த உத்தமச் சோழர். 'சோழ கங்கம்' என்னும் வியத்தகு ஏரியை எடுப்பித்த முடி கொண்ட சோழர். புகழ் மலிந்த ராஜேந்திர சோழரின் ஆட்சியில் பன்மொழிகளும், பல சமயங்களும் தழைத்து வாழ்கின்றன. 'சோறுடைய சோழ நாடு, ஏறு நிறை தமிழகத்தின் தலை நாடு' என்று எங்கணும் கேட்கிறது புகழ் முழக்கம். இத்தனைக்கும் பாட்டுடைத் தலைவரான தங்களை, அந்தப்புரக் காரணத்துக்காகவா பெரும் பழியிட்டுத் தூற்றுவார்கள்?

ராஜேந்: சர்வசிவ பண்டிதரிடம் பயின்ற பாடத்தையே கவிதையாக்கி எனக்குச் சூட்டுகிறாயா மகளே? புளித்த புகழினை உன்னிடம் கேட்டுப் போக வரவில்லை நான். அம்மங்கா! அரச குமாரர்களைத்தான் உனக்குப் பிடிக்கவில்லை. போகட்டும். ஏழைகளை

லாவது உனக்கும் பிடித்த ஒருவனை ஏந்தலாக ஏற்றுக் கொள்ளக் கூடாதா?

அம்மங்கா (சற்றுச் சிந்தையில் ஆழ்ந்து விட்டு): எனக்கும் பிடித்தவன் ஒருவன் இருக்கலாம். ஆனால் அவனுக்கு என்னைப் பிடிக்க வேண்டுமே!

ராஜேந்: பிடிக்க வேண்டுமா?... உன் அழகு என்ன, குணம் என்ன, கல்வி என்ன! சோழத்து இளவரசியின் கரம் பற்ற இச்சைப்படாதவனும் ஒருவன் இருப்பானா?

அம்மங்கா: அப்பா! இந்த உலகத்தில் என்னை விட அழகிகள் இல்லையா தா?

ராஜேந்: இருக்கலாம். அதனால் என்ன?

அம்மங்கா: என்னை மணந்துகொண்ட பிறகு என்னிலும் மேம்பட்ட ஓர் அழகியைக் கண்டு, அவன் மீது அவன் ஆசைப்படுவானே யானால்...?

ராஜேந்: அவலட்சணமான மனைவியாக இருந்தாலும் அவளிடம் அந்தரங்கமான பிரேமை கொண்ட மனிதர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள்.

அம்மங்கா: அதற்குக் காரணம் என்ன தெரியுமா, அப்பா!

ராஜேந்திரன்: நீயே சொல்.

அம்மங்கா: மற்றவர்களுக்கெல்லாம் மகா விகாரமாகப் படுகிற ஒரு பெண்ணின் வடிவத்தை, சௌந்தர்யத்தின் லட்சியமாக வழிபடக் கூடிய ஒருவன், உலகத்தில் இருக்கத்தான் செய்வான். ஈசனின் செயலால் அவளுக்கே அவன் மனைவியாக வாய்த்துவிட்டால், அவர்களது இல்வாழ்க்கை தான் இன்ப சாகரம்.

ராஜேந்: அதேபோல் உன் வடிவத்தைச் சௌந்தர்யத்தின் லட்சியமாக வழிபடக்கூடிய ஆடவன் ஒருவன் இருக்கத்தானே செய்வான்?

அம்மங்கா: அவனும் இருக்கத்தான் செய்வான். ஆனால் உலகத்தில் எந்தப் பகுதியில் அவன் இருக்கிறானோ?

ராஜேந்: அவன் யார் என்று தெரிந்தால் ஆட்களை அனுப்பித் தேடலாம். அதுவும் தெரியவில்லையே?

அம்மங்கா: நான் வணங்கும் திரிபுராந்தகனுக்குத்தான் அது தெரியும்! அப்பா! என் பூஜை அறைக்குக் கலைமகள் படம் ஒன்று கேட்டேனே?

ராஜேந்: சித்திரம் தயாராகிக் கொண்டிருக்கிறது. நாளை உன் கையில் கிடைக்கும்.

அம்மங்கா: மறக்க மாட்டீர்களே?

ராஜேந்: மறக்காமல் அமைச்சர் செம்பியன் மூவேந்த வேளாரிடம் கூறிவிட்டுப் போகிறேன்.

அம்மங்கா: போகிறீர்களா? எங்கே அப்பா?

ராஜேந்: பாண்டி நாட்டுக்கு. அங்கே உன் தமையன் சுந்தர சோழன் ஆட்சி நடத்திக் கொண்டிருக்கிறான் அல்லவா? அதைப் பொறுக்காத பாண்டியன், காந்தளூர்ச் சாலையில் கலகம் விளைவித்துக் கொண்டிருக்கிறான். நாளைத் தலைவன் அரையன் ராஜராஜனோடு நாளைப் புலரும் போதில் புறப்படுகிறேன்.

அம்மங்கா: எப்பொழுது திரும்புவீர்கள்?

ராஜேந்திரன்: காந்தளூர்ச் சாலையின் 'கலம் அறுக்க' இரண்டு சூர்யோதயங்களே அதிகம் அம்மங்கா! நான் திரும்பும்வரை செம்பியனார் என் பிரதிநிதியாக இருப்பார்.

காட்சி – 2

[ காரியக்கூடத்தில் அமைச்சர் செம்பியன் மூவேந்த வேளார் தனித்து அமர்ந்திருக்கிறார். ஓவியன் மந்தாரன் மூடிப் புனைந்த ஒரு சித்திரத்துடன் வருகிறான்.]

மந்தாரன்: வாழ்க, குன்றாப் புகழுடை சோழம்! வணக்கம் அமைச்சரே!

செம்பியன்: வாருங்கள் ஓவியரே! தங்களைப் பற்றிச் சொல்லிப் போயிருக்கிறார். கலைமகளின் சித்திரத்தைப் புனைந்துவிட்டீர்களா?

மந்தாரன்: இறைவன் அருள், அதைப் புனைந்து முடித்திருக்கிறது! இதோ பாருங்கள்!

[ சித்திரத்தின் மேல் சுற்றி இருந்த சீலையைப் பிரிக்கிறான் மந்தாரன். அச் சித்திரத்தை இமைக்காது வெகு நேரம் பார்க்கிறார் செம்பியனார்.]

செம்பியன்: கலைஞரே! இது கலைமகளின் சித்திரம்தானா?

மந்தாரன்: இந்தச் சோழப் பேரரசின் அமைச்சராகவும், தற்சமயம் சக்கரவர்த்திகளின் பிரதிநிதியாகவும் இருக்கும் நீங்கள்,



என் கலையை இவ்வளவு இழிவுபடுத்திப் பேசுவீர்கள் என நான் எதிர்பார்க்கவில்லை.

செம்பியன்: நான் கலையை இழிவுபடுத்துவதாக எண்ண வேண்டாம் ஓவியரே! ஆனால் நிச்சயமாக இது கலைமகளின் படம் அல்ல!

மந்தாரன்: எதனால் அப்படிக் கூறுகிறீர்கள்? கலைமகளுக்குரிய சின்னங்களில் ஏதேனும் குறை இருக்கிறதா?

செம்பியன்: சின்னங்களில் ஒன்றும் குறை இல்லை. கையில் சுவடி, ஸ்படிக மாலை, மாணிக்க வீணையெல்லாம் இருந்தும்...

மந்தாரன்: பிறகு?

செம்பியன்: அந்த முகம்தான்...

மந்தாரன்: முகத்துக்கு என்ன? அதில் பூரண ஞான ஒளி வீசவில்லையா?

செம்பியன்: சித்திரத்தில் காணப்படுவது எனக்குத் தெரிந்த ஒரு யுவதியின் முகம். அவளை உமக்கும் தெரிந்திருக்கிறதென்றே இப்பொழுது தீர்மானிக்கிறேன்.

மந்தாரன்: என்ன! இத்தகைய எழில் வதனமுள்ள ஓர் ஏந்திழை இந்த உலகத்தில் இருக்கிறாளா?

செம்பியன்: வேறு எந்த உலகத்தில் நீர் அவளைப் பார்த்தீர்?

மந்தாரன்: எனக்குச் சொந்தமான கற்பனை உலகத்தில்!

செம்பியன்: இல்லை. அது பொய் உலகம்!

மந்தாரன்: என்ன!...

செம்பியன்: அதனால்தான் கவிஞர்களும் பொய் சொல்கிறார்கள்!

மந்தாரன்: இது பொருத்தமற்ற குற்றச் சாட்டு.

செம்பியன்: இல்லை. நீர் கலைமகளாகச் சித்திரித்திருக்கும் கன்னிகை, உம்மைப் போன்றவர்களது கனவில் கூட காண்பதற்கு அரியவள். ஆனால் இந்தச் சித்திரத்தில் விளங்கும் எழிலார்ந்த மோகனப் புன்னகையைக் காணும்போது, நீர் அவளை எதிரில் வைத்துக் கொண்டே இதை எழுதியிருப்பதாக நான் தீர்மானிக்கிறேன்.

மந்தாரன்: தங்கள் அனுமானம் முற்றிலும் தவறானது. கலைமகளின் சித்திரம் வேண்டும் என்று கேட்டார் சக்கரவர்த்திகள். அதற்காக, தெய்வீக சௌந்தர்யத்தின் வடிவமாக விளங்கும் வதனம் ஒன்றைக் கற்பனை செய்தேன். அப்போது என் அகக் கண்ணுக்குத் தோற்றம் அளித்த அற்புதக் காட்சியைச் சித்திரமாகத் தீட்டியிருக்கிறேன்.

செம்பியன்: அகமும் புறமும் கலந்து வடித்த காட்சிக்கு, நான் பொய் விளக்கம் கேட்க ஒப்பவில்லை. இப்பொழுது நீர் உமக்கு வேண்டிய சன்மானத்தைப் பெற்றுச் செல்லலாம்.

மந்தாரன்: பிழை கூறிவிட்டு, அதற்குச் சன்மானமும் வழங்க நீங்கள் தயாராக இருக்கலாம். ஆனால் பிழையையே பிழைப்பாகக் கொண்ட பொய்க் கவிஞன் நானல்லன்.

[ அவன் கையிலிருந்த ஓவியத்தைச் செம்பியனார் திருமுன்னே வைத்து விட்டுப் புயலாக விரைகிறான்.]

செம்பியன்: ஓவியரே! சற்றே நில்லும். இந்தக் கலைமகளின் சித்திரம்...

மந்தாரன்: உங்களிடமே இருக்கட்டும். உண்மைக் கவிஞன் இதயத்தை என்றாவது நீங்கள் புரிந்து கொள்வதற்கு உதவியாக இது உங்களிடமே இருக்கட்டும்.

## காட்சி — 3

[ பூஜை அறை. அம்மங்கா தேவி புரந்தரன் எதிரே கண் மூடிக் கை குவித்துக் கொண்டிருக்கிறாள். அமைச்சர் செம்பியன் மூவேந்த வேளார் அங்கு வருகிறார்.]

செம்பியன் (கரம் கூப்பி):

பெருஞ்சுடர் மூன்றினும் உள்ளொளி யாகித்
தெரிந்துடை வாய்நிற்குந் தேவர் பிரானும்
இருஞ்சுடர் விட்டிட் டிகலிட மெல்லாம்
பரிந்துடன் போகின்ற பல்கோரை யாமே!

அம்மங்கா தேவி (பாடலைக் கேட்டுக் கண் மலர்ந்து): வாருங்கள் அமைச்சரே!

செம்பியன்: பூஜை வேளையில் நான்....

அம்மங்கா: பிரசன்னமாகும் புரந்தரனுக்குக் காட்சி அளிக்கிறீர்கள்!

செம்பியன் (சிரித்துவிட்டு): வழிபாடு முடிந்து விட்டதல்லவா தேவி?

அம்மங்கா: முடிந்தது போலத்தான்... ஏதோ முக்கியமாகப் பேச வந்திருப்பீர்கள் போலிருக்கிறதே?

செம்பியன்: ஆமாம், அம்மங்கா! நேற்றுக் காலையில் நான் ஓர் ஓவியனைக் கண்டேன், அவன் கையில் ஓர் அற்புதமான சித்திரம்...

அம்மங்கா: என்ன சித்திரம்?

செம்பியன்: பேரெழில் வாய்ந்த ஒரு பெண்மணியின் சித்திரம்.

அம்மங்கா: அவள் அவனுடைய காதலியாக இருக்கலாம்!

செம்பியன்: நானும் அப்படித்தான் சந்தேகித்தேன். ஆனால், அவன் அவளைப் பார்த்தது கூடக் கிடையாதென்று மறுக்கிறான்.

அம்மங்கா: அப்படியானால், அவள் அவனது கற்பனை சிருஷ்டியாகத்தான் இருக்க வேண்டும்.

செம்பியன்: இல்லை, அம்மங்கா! அவள் உன்னைப் போல் பிரும்ம சிருஷ்டியில் மலர்ந்த ஒரு பெண்தான்!

அம்மங்கா: அவளை உங்களுக்கு நன்றாகத் தெரியுமா?

செம்பியன்: அவள் எதிரில்தான் இப்பொழுது நான் பேசிக் கொண்டிருக்கிறேன்.

அம்மங்கா (வியப்புற்று): என்ன!

செம்பியன்: ஆம், தேவி! சந்தேகம் இருந்தால் இந்தச் சித்திரத்தைப் பாருங்கள்!

[ மணிக் கதவத்தின் அருகே வைத்திருந்த சித்திரத்தை எடுத்து வந்து காட்டுகிறார் செம்பியனார். அதைப் பார்த்துப் பிரமிக்கிறாள்.]

அம்மங்கா (சற்றைக்குப் பின்னர்): இது கலைமகளின் சித்திரம்.

செம்பியன்: இல்லை, ராஜேந்திர சோழரின் இரண்டாவது புத்திரி அம்மங்கா தேவியின் எழில் ஓவியம்!

அம்மங்கா: உண்மைதான்! தாங்கள் கூறுவதை மறுப்பதற்கில்லை.

செம்பியன்: அம்மங்கா தேவி! அந்த ஓவியன் உன்னை எங்கே, எப்பொழுது பார்த்தான்?

அம்மங்கா: ஓவியனாவது என்னைப் பார்ப்பதாவது! அதிருக்கட்டும். அவன் பெயர் என்ன, அமைச்சரே!

# 14 வயதிலேயே அவளுக்கு பாங்கியில் ஒரு கணக்கா!

## இதில் என்ன ஆச்சரியம்?



## பாங்க் ஆஃப் பரோடா

## சிறுவர்கள் சேமிப்புத் திட்டம் — 3% வட்டி

# தலைவலியிலிருந்து

## நல்ல, நிச்சயமான நிவாரணம்




அனஸின் இவ்வளவு சக்திவாய்ந்ததாக இருப்பதற்குக் காரணம் அது ஒரு டாக்டரின் குறிப்பைப்போன்று மருந்துகளின் சேர்க்கையாகும்—துரிதமாகவும் நிவாரணமளிக்கிறது.

- வலியிலிருந்து துரித நிவாரணம் அளிப்பதற்கென அனஸினில் ஒரு பிரத்தியேகமான முறையில் பொருள்கள் சேர்க்கப் பட்டுள்ளன.
- அனஸின் சாதாரணமாகத் தலைவலிக்குக் காரணமான நரம்புகளின் படபடப்பைப் போக்குகிறது.
- அனஸின் ஜுரத்தைத்தணிக்க உதவுகிறது.
- அனஸின் உபயோகிப்பதால் வலி மற்றும் ஜுரத்தினால் ஏற்படும் சோர்வு நீங்குகிறது.

*Registered Users:* GEOFFREY MANNERS & CO. LTD.

# அனஸின்

**சிறந்தது** எனெனில் அது
**4** வழிகளில்
வேலை செய்கிறது

2 வில்லைகளுக்கு 13 ந. பைசேதான்

TAM AA

செம்பியன்: மந்தாரன்! வேங்கி நாட்டைச் சேர்ந்தவன்.

அம்மங்கா (மலர்ச்சியுடன்): என் அத்தை குந்தவையாரைக் காதலித்துத் திருமணம் புரிந்து கொண்ட சாளுக்கிய விமலாதித்தரின் நாட்டைச் சேர்ந்தவனா அவன்?...அவனைப் பற்றி நான் கேள்விப்பட்டது கூடக் கிடையாது மூவேந்த வேளாரே!

செம்பியன்: அம்மங்கா தேவி! பெண்களின் உள்ளம் ஆழமானது தான். ஆனால் அந்த ஆழத்தையும் அளந்து பார்க்கும் ஆற்றல் என் போன்ற அமைச்சர்களுக்கு உண்டு.

### யார் சைத்தான்!

பெஞ்சமின் டிஸ்ரேலி தேர்தலில் நின்ற சமயம் வீடு வீடாகச் சென்று தமக்கு வோட்டுப் போடுமாறு கேட்டார். அப்பொழுது ஒரு குடியானவன் அவரைப் பார்த்து "உமக்கு வோட்டுப் போடுவதைக் காட்டிலும் சைத்தானுக்கு வோட்டுப் போடலாம், ஐயா!" என்றான். டிஸ்ரேலி கொஞ்சமும் கோபப்படாமல் "உங்கள் நண்பர் வோட்டுக் கேட்டு வராவிட்டால் எனக்குப் போடலாமல்லவா?" என்றார், தமது எதிர்ப்பாளரைச் சைத்தான் என்று வைத்து.

அம்மங்கா: அப்படியா? என் உள்ளத்தின் ஆழத்தில் கண்டு பிடித்த ரகசியம் என்ன?

செம்பியன்: குலப் பெருமைக்கு ஒவ்வாத கூட்டுறவு!

அம்மங்கா (கோபத்துடன்): அமைச்சரே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

செம்பியன்: நீயோ அரச குடும்பத்தில் பிறந்த பெண். மந்தாரனோ கேவலம் சித்திரம் தீட்டிப் பிழைப்பவன்....

அம்மங்கா: போதும். நான் மந்தாரனைக் காதலிப்பதாகவே வைத்துக் கொள்வோம். அதைத் தடை செய்வதற்கு நீங்கள் யார்?

செம்பியன்: இந்தப் பேரரசின் அமைச்சன்.

அம்மங்கா: அப்படியானால் உங்கள் வேலை அந்தப்புரத்துக்கு வெளியே இருக்கட்டும்

செம்பியன்: தற்சமயம் நான் சக்கரவர்த்திகளின் பிரதிநிதி.

அம்மங்கா: என் சொந்த விஷயத்தில் தலையிடுவதற்கு என் தந்தைக்கே உரிமை கிடையாது.

## காட்சி – 4

[ விருந்தினர் விடுதியில் மந்தாரன், தன் அறையின் பலகணியில் முகத்தைப் புதைத்துக் கொண்டிருக்கிறான். அப்பொழுது முகத்தைப் போர்த்திக் கொண்டு ஒரு பெண் வாசலில் வந்து நிற்கிறாள்.]

பெண்: ஐயா!...

[ மந்தாரன் முகத்தைத் திருப்புகிறான்]

பெண்: மந்தாரன் என்ற ஓவிய நிபுணர்...

மந்தாரன்: நான்தான்! நீ யார் அம்மா?

பெண்: இளவரசி அம்மங்கா தேவியின் தோழி நான்.

மந்தாரன்: என்ன விசேஷமோ?

பெண்: ஒரு முக்கிய விஷயம் பற்றிப் பேச வேண்டும்.

மந்தாரன்: தாராளமாகப் பேசலாம். ஆனால், அதற்கு இரண்டு நிபந்தனைகள்...

பெண்: சொல்லலாம்!

மந்தாரன்: நீ வாசற்படியிலேயே நின்று கொண்டிருக்கக் கூடாது. உள்ளே வந்து உட்கார வேண்டும்.

பெண் (உள்ளே வந்து உட்கார்ந்து கொண்டு): சரி, இரண்டாவது நிபந்தனை?

மந்தாரன்: உன் முகத்தை மறைத்திருக்கும் ஆடையை விலக்க வேண்டும்.

பெண்: இந்த நிபந்தனையை நீங்கள் ஒரு பெண்ணிடம் வற்புறுத்த முடியாது. வற்புறுத்தவும் கூடாது.

மந்தாரன்: நல்லது. நீ வந்த விஷயம்?

பெண்: எங்கள் அரண்மனைக்குக் கலைமகளின் சித்திரத்தை வரைந்து கொடுத்தது நீங்கள்தானே?

மந்தாரன்: ஆம். அதற்கென்ன?

பெண்: கலைமகளின் வேடத்தில் எங்கள் இளவரசியின் திருவுருவத்தை அல்லவா தீட்டி விட்டீர்கள்?

மந்தாரன்: உங்கள் இளவரசி அத்தனை பேரழகியா?

பெண்: அவளைச் சித்திரமாகப் புனைந்திருக்கும் உங்களுக்கு அது தெரியாதா?

மந்தாரன்: அமைச்சர் செம்பியன் மூவேந்த வேளார் என்னைத் துளைத்துத் துளைத்துக் கேட்டதன் காரணம் எனக்கு இப்பொழுதுதான் புரிகிறது!

பெண்: என்ன கேட்டார்?

மந்தாரன்: சித்திரத்தில் உள்ள உருவம் காண்பதற்கரிய ஒரு காரிகையினுடையதென்றும், அவளை நேரில் வைத்துக் கொண்டே, நான் அந்தச் சித்திரத்தைத் தீட்டியிருக்க வேண்டும் என்றும் கூறினார்.

பெண்: எங்கள் இளவரசிக்கு உங்களால் எத்தகைய அபவாதம் ஏற்பட்டுவிட்டது.

மந்தாரன்: அதற்கு நான் என் செய்வேன்?

பெண்: வேடிக்கையாக இருக்கிறது உங்கள் பதில்! உண்மையைக் கூறுங்கள். எங்கள் இளவரசிக்கும் உங்களுக்கும் எவ்வளவு காலமாக நட்பு?

மந்தாரன்: அட, ஈசுவரா!... உங்கள் இளவரசியை நான் பார்த்ததே யில்லையே!

பெண்: பிறகு அவள் உருவத்தை மட்டும் எப்படி இவ்வளவு தத்ரூபமாக உங்களால் எழுத முடிந்தது?

மந்தாரன்: அதைச் சொன்னால் உனக்குப் புரியாது.

பெண்: அதன் பொருள்? புரியும்படியாகச் சொல்ல உங்களுக்குத் தெரியாது என்பதா?

மந்தாரன் (சிரித்து): நீ கெட்டிக்காரி. சோழ மன்னனின் வியப்புக்குரிய விளைச்சல் நீ!

பெண்: புகழ்ச்சி இருக்கட்டும். கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்.

மந்தாரன்: ராஜேந்திரச் சக்கரவர்த்திகள், தம் புதல்வியின் பூஜை அறைக்குக் கலைமகளின்

சித்திரம் ஒன்றை வரைந்து தருமாறு என்னிடம் கேட்டார்....

பெண்: ஊம்...

மந்தாரன்: அதனால் கலைமகளுக்கு ஓர் அற்புதமான உருவத்தைக் கற்பிக்க வேண்டிய ஒரு நிமித்தம் ஏற்பட்டது.

பெண்: சரி...

மந்தாரன்: அந்த உருவம் தெய்வீகம் பொருந்தியதாக இருக்க வேண்டும்; முகத்தில் சாந்தியும், ஞான ஒளியும் பொலிந்திட வேண்டும்.

பெண்: உண்மை.

மந்தாரன்: எல்லாவற்றுக்கும் மேலாக அது இணையற்ற பேரெழிலுடனும் விளங்க வேண்டும், இல்லையா?

பெண்: ஆமாம்.

மந்தாரன்: எனவே, தெய்வீக சௌந்தர்யத்தின் லட்சியமாக, ஒரு காரிகையின் உருவத்தைக் கற்பனையில் சிருஷ்டித்தேன்.

பெண்: சௌந்தர்யத்தின் லட்சியமா?

மந்தாரன்: ஆம். ஏன்?

பெண்: உங்கள் கற்பனையில் விளைந்த கலைமகளுக்கும், சோழத்திலே விளைந்த எங்கள் இளவரசிக்கும் எள்ளத்தனை வித்தியாசமும் கிடையாதே!

மந்தாரன்: உண்மைதானா?

பெண்: சந்தேகம் இருந்தால் இதோ பாருங்கள்!

[அவள் தன் முகத்தில் போர்த்திக் கொண்டிருந்த ஆடையை விலக்குகிறாள். அவள் அம்மங்கா தேவி! மந்தாரன் வியப்பு மேலிட அவளைக் கூர்ந்து நோக்குகிறான்.]

மந்தாரன்: என்ன! இளவரசியா? என் சௌந்தர்ய லட்சியமா? என் கற்பனை வழிபாட்டில் கண்டெடுத்த கலைமணியா?

அம்மங்கா: என் சௌந்தர்ய லட்சியக் கனவுக்கு இன்னொருவரும் பங்கா? இப்போதும் நான் கனவு காண்கிறேனா?

[அப்போது ராஜேந்திர சோழனும், அமைச்சர் செம்பியன் மூவேந்த வேளாரும் பிரவேசிக்கிறார்கள்.]

ராஜேந்திரன்: நீ கனவு காணவில்லை, அம்மங்கா! உன் பூஜைக்கெல்லாம் பலன் கிடைத்து விட்டது.

அம்மங்கா (திகைத்து): அப்பா!...

மந்தாரன்: சக்கரவர்த்திகளே!...

ராஜேந்திரன்: 'மாமா' என்றே நீ அழைக்கலாம் சாளுக்கிய நரேந்திரா!

நரேந்திரன்: என்ன சொல்கிறீர்கள்?

ராஜேந்திரன்: நீ என் தமக்கை குந்தவையாரின் புதல்வன் என்கிறேன். வேங்கி நாட்டின் இளவரசன் என்கிறேன்! என் மருகனைக்கூட இதுநாள் வரை பார்க்க இயலாதபடி போர்க்களங்கள் என்னை வேற்று நாடுகளுக்கு இட்டுச் சென்று விட்டன. ஒற்றர் தலைவர் உண்மையைச் சற்று நேரத்துக்கு முன் உளவறிந்து கூறிய பிறகுதான் உன்னை யார் என்று தெரிந்து கொண்டேன். நரேந்திரா! நீ ஏன் புனை பெயரும், பொய் உருவும் கொண்டு இங்கே வந்தாய்?

நரேந்திரன்: கலையின் மேலுள்ள காதலால்! இங்கே வேங்கி நாட்டு இளவரசனாக வருகை தந்து ஆடம்பர மரியாதைகளுடன் திரும்பிப் போக நான் விரும்பவில்லை. ஒரு கலைப் பறவையாக வந்து, கற்றளிகளையும், 'தஞ்சைத் தளிக்குளத்தார்' பிரகதீசுவரர் ஆலயத்தையும் கண்டு களித்துத் திரும்ப நினைத்தேன். என் அன்னையாரும் அதனையே விரும்பினார். அதில் தவறு இருப்பின் சக்கரவர்த்திகள் மன்னிக்க வேண்டும்.

ராஜேந்திரன் (நகைத்து): நான் உன்னை மன்னிக்காவிட்டால் அம்மங்காதேவி என்னை மன்னிக்க மாட்டாள். இல்லையா அம்மா?

[அம்மங்காதேவி நாணிக் குனிகிறாள்.]

ராஜேந்திரன்: காந்தளூர்ச் சாலையின் 'கலம் அறுத்து' நான் திரும்பும்போது, செம்பியன் மூவேந்த வேளாரிடமிருந்து உன் சித்திரம் விபரீதம் குறித்த செய்தி வந்தது. திரும்பி விரைந்து வந்தேன். இங்கே வந்த இடத்தில் அமைச்சரும் நானும் மறைந்திருந்து உங்கள் 'சௌந்தர்ய லட்சியத்'தைக் கேட்டோம். அம்மங்கா தேவி! 'ஒரு பெண்ணின் வடிவத்தைச் சௌந்தர்யத்தின் லட்சியமாக வழிபடக் கூடிய ஒருவன் இந்த உலகில் இருக்கத்தான் செய்வான்' என்று அன்று சொன்னாயே, அந்த ஒருவன் கிடைத்து விட்டான் அல்லவா?

[அம்மங்காதேவியின் கட்டை விரல் நிலம் கீறுகிறது.]

ராஜேந்திரன்: 'கனவுகள் வாழ்வதில்லை' என்பார்கள்! இங்கே வாழ்வதற்காகவே இரண்டு கனவுகள் பிறந்திருக்கின்றன! மூவேந்த வேளாரே! அம்மங்கா தேவியின் திருமணத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்.

செம்பியன்: மணமகன் யார் சக்கரவர்த்திகளே?

ராஜேந்திரன்: இன்னுமா புரியவில்லை? வேங்கி நாட்டு இளவரசன் சாளுக்கிய ராஜ ராஜ நரேந்திரன்!

காட்சி — 6

[நிலா முற்றத்தில் அம்மங்கா தேவி அமர்ந்திருக்கிறாள். அவள் அருகில் சாளுக்கிய நரேந்திரன் — ஓவியனாக அல்லாமல் இளவரசனாகவே உட்கார்ந்திருக்கிறான்.]

அம்மங்கா: என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? அதை என்னால் தாங்க முடியவில்லை.

நரேந்திரன்: உன்னை நேரில் கண்டது முதல் நான் வரைந்த சித்திரத்தின் குறைகள் எனக்கு நன்றாகத் தெரிகின்றன. குறைவற்ற சௌந்தர்ய ஓவியமாக உயிருள்ள நீ இந்த நாட்டில் இருக்கும்போது மாமன்னர் கலைமகளின் ஓவியம் கேட்டுக் கலைஞர்களின் கையை எதிர்பார்க்கிறாரே என்று...

அம்மங்கா: என்னைக் காணுதபோதே என்னைப் போன்ற படம் வரைந்து என்னையே பரிசாகப் பெற்றுக் கொண்டு விட்டீர்கள். இனி எப்போதும் உங்கள் அருகிருக்கப் போகும் என்னை உட்கார்த்தி வைத்துப் படமெழுதி இந்த நாட்டையே பரிசாகப் பெறும் பேராசை ஏற்பட்டு விடப் போகிறது.

நரேந்திரன்: தந்தை நாடிழந்து விடப் போகிறாரே என்ற பயமா அம்மங்கா? அன்பே, நீ அருகிருக்கும்போது நான் இனி எதற்காகப் படமெழுதப் போகிறேன்?



# எங்கப்பாவுக்குக் கல்யாணம்

துரோணன்

பெரிய வீட்டில் கல்யாணம். வெளியூரைச் சேர்ந்த இரண்டு ஜதை மேளக்காரர்களும் போட்டா போட்டியாக வாசித்து ஊரைக் கூட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

மூன்று வீட்டு எல்லைக்குச் சரியாகப் பெரிய பந்தல். இரண்டு முகப்புக்களிலும் குலையுடன்கூடிய வாழை மரங்கள் — தென்னங்காய்க் குலைகள், பனங்குலைகள். பந்தல் விட்டமெங்கிலும் பச்சைப் பசேலெனக் கட்டியிருக்கும் மாவிலைத் தோரணங்கள். இன்னும், ஆளோடிப் படங்குகளிலெல்லாம் கண்ணைப் பறிக்கும் காவி, சுண்ணாம்புப் பட்டைகள். கீழ்ப் பரப்பு எங்கிலும் சுத்தமான மணல் விரிப்பு. வாசற்படிக்கட்டு, நடு வாசல்களில் வண்ண விசித்திரமான தாமரைப் பூக்கோலங்கள். அக்கோலத்தின் நடுவுக்குச் சரியாகக் கட்டப்பட்டிருக்கும் ஊஞ்சல்.

பந்தலுக்குள் சிற்று மறைப்பை ஒட்டினாற் போல் அமர்ந்து அரட்டையடிக்கத் தக்க வரிசையான நாற்காலிகள்.

பந்தலுக்குள்ளும், வெளியிலுமாக ஒரு குதூகலக் கூட்டம்; பதினைந்துக்குக் குறைவில்லை. எல்லாம் நாலடி உயரத்திற்கு மேற்படாத பத்து வயதுக்குட்பட்ட அரை டிக்கட்டுக்கள்!

ஒரு நோஞ்சல் பயல் வாழை மரத்திலிருக்கும் அடுக்கடுக்கான பிஞ்சுச் சீப்புக்களைப் பறிப்பதற்காக ஏறிக் கொண்டிருக்கிறான். ஒருவன், அவன் சமீபம் நின்று கொண்டு அவனை உற்சாகப்படுத்திக் கொண்டிருக்கிறான். மற்றொருவன், அவர்களுடைய முயற்சியைத் தடுத்துப் பயம் காட்டிக் கொண்டிருக்கிறான். சற்று தூரத்துக்கப்பால் ஒரு போக்கிரிப் பயல், நாலா திசைகளிலும் உருண்டு கிடந்த சிவப்பு நிறச் சாத உருண்டைகளைப் பொறுக்கி வைத்துக் கொண்டு, அவற்றை யார் மேல் வீசலாம் என்று இலக்கு பார்த்துக் கொண்டிருக்கிறான். வெளிப்புறத்தில், இரண்டு பயல்கள் மேளக்காரரின் சினிமாப் பாட்டுக்குத் தக்கபடி அபிநயக்கூத்து ஆடிக் கொண்டிருக்கிறார்கள்.

பந்தலின் கோடியிலே ஆரவார வேட்டுச் சிரிப்புக்களுடன் அமர்க்களப்படுத்திக் கொண்டிருக்கும் சீட்டாட்டக் கோஷ்டி ஒரு புறம்; பந்தலுக்கு வெளியிலே — கூடையும் கையுமாக நின்று, காலைப் பலகார வகைகளுக்காகக் கூப்பாடிடும் தெருக் குட்டிகள் ஒரு புறம்; எதிர்ப்புறத்துக் குப்பைக் குழியின் சமீபம் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கும் மந்தை நாய்களின் சீற்றம் ஒரு புறம் — கல்யாணம் களை கட்டியிருந்தது!

பந்தல் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த பாசஞ்சர்கள் அரை டஜனுக்கு மேல் இருந்தது. ஆமாம், அவர்கள் எல்லாம் 'பாசஞ்சர்கள்தான்! அப்பொழுது அந்த ஊஞ்சல் ஒரு 'போட் மெயில் ரயிலாக மாறியிருந்தது! இரண்டுபுறமுள்ள சங்கிலிகளுக்கு நடுவில் நிற்கும் ராமுவும், சுப்புணியும்தான் அந்த மெயிலுக்கு டிரைவர், கார்டுகள். மணி, விமலா, பஞ்சாமி, கிட்டு, சீனு, ஸ்ரீதரன், ரகு இவர்களெல்லாம் பாசஞ்சர்கள். நடுவில் உட்கார்ந்திருக்கும் நாலு வயதுச் சீனுதான் என்ஜினின் விசில்! அவன் ஊதினால்தான் ரயில் ஓட முடியும்! ஏனென்றால், அவன் தானே கல்யாண வீட்டின் பையன்? மெயில், 'கூ'வெனக் கத்தி விட்டுக் குத்தாலம் ஸ்டேஷனை விட்டுக் கிளம்பிற்று!

பந்தலுக்குள் ஓர் ஒதுக்குப்புறமான இடத்தில் அமர்ந்து, மணலை முட்டாடிக் கோபுரம் கட்டிக் கொண்டிருக்கும் கல்யாணியும், மாலாவும் மாத்திரம் இதில் எல்லாம் சேராத தனிக் கட்சி! ஏனென்றால், அவர்கள் ஆறாம் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கும் பதினொரு வயதுப் பெரியவர்களல்லவா?

கல்யாணி உடுத்தியிருந்த பட்டுப் பாவாடை, சட்டை, கழுத்துச் சங்கிலி இவற்றையெல்லாம் உற்று உற்றுப் பார்த்துப் பிரமித்தபடி இருந்தாள் மாலா. பாவம், அவள் ஏழைப்பெண்! இதற்காகக் கல்யாணி அவளிடம் எத்தகைய வேற்றுமையும் காட்டவில்லை. சரளமாகத்தான் பேசிக் கொண்டிருந்தாள். ஆனால், மாலாவிடம் மாத்திரம் கல்யாணிக்குள்ள கலகலப்பு இல்லை.

கல்யாணி திடீரென நினைத்துக் கொண்டவளாக, ''ஏன் மாலா, நாளைக்குச் சனிக்கிழமை விளாசம் வகுப்பு உண்டே — நீ டீச்சர் சொல்லியிருந்த 'எங்கள் வீட்டுக் கல்யாணம்' என்கிற கட்டுரை எழுதி விட்டாயோ?'' என்றாள் அவளுடைய தோளைப் பற்றி உலுப்பியபடி.

''ம்! நான் எங்கள் அண்ணாவின் கல்யாணம் புதுக் கோட்டையிலே நடந்ததே — அதைப் பற்றி ரொம்ப ஜோரா எழுதி வைச்சிருக்கேன். நம்ப கிளாஸ் மங்களம்கூட அவளுடைய அக்கா கல்யாணம் மதுரையிலே நடந்ததைப் பற்றி எழுதியிருக்கிறாளே.''—இச்

செய்திகளை மாலா மிகப் பெருமையுடன் கூறினாள். தொடர்ந்து, "நீ?" என்ற எதிர்க் கேள்வியையும் விடுத்தாள்:

கல்யாணி தலையை அசைத்து 'இல்லை' எனத் தெரிவித்தாள்.

மாலாவின் முகத்தில் அப்போது விஷமத் தனம் பரவிப் பளிச்சிட்டது: கல்யாணியை நோக்கி, "ஆமாம், நீ யாருடைய கல்யாணத்தைப் பற்றி எழுதப் போறே? உனக்குத்தான் அண்ணா, அக்காள் ஒருவரும் இல்லையே!" என்றாள்.

கல்யாணி அசட்டுக் களையுடன் பெருமூச்சு விட்டாள்.

மாலா தொடர்ந்து, "ஏன், அன்னிக்கு நீ லீவு லெட்டர் எழுதினியே, அந்த மாதிரியா" எனக் கூறி விட்டுக் கண்களைச் சிமிட்டிக் கொண்டே கேலித்தனம் மிகைப்பட 'களுக்' கென நகைத்தாள். அடுத்த கணமே கல்யாணியின் முகம் கன்றி விட்டது. பார்வையை வேறுபுறத்திற்குத் திருப்பிக் கொண்டாள். பின்னர் தன் முழங் கால்களைக் குத்திட்டுக் கட்டிக் கொண்டு, அவற்றின் மீது தலை கவிழ்ந்து கொண்டாள்.

மாலாவின் வார்த்தையிலும், முகத்திலும் ஏழைக் குறும்பின் வேகம் எக்களித்தது! அதற்கு நேர் எதிராகக் கல்யாணியின் உள்ளத்திலோ — துயரம் ஒருபுறம், வெட்கம் ஒருபுறமாக அலைமோதி நெஞ்சையடைத்தன. இரண்டும் சமமான இளம் பிஞ்சு உள்ளங்கள்தான். ஆனால் ஒன்று கறை பிடிக்கும் கத்தாழைச் சாறு — மற்றொன்று கசடு காணாக் கரும்புச் சாறு!

மாலா கட்டிக் காட்டிய செய்தி மிகச் சாதாரணமானதுதான் என்றாலும், இப்போது அவளுடைய கருத்து?

மூன்று தினங்களுக்கு முன்னால், கல்யாணி தன் வகுப்பு ஆசிரியருக்கு ஒரு லீவு லெட்டர் எழுதியிருந்தாள். அதில் அவள், 'எங்கள் வீட்டில் என்னுடைய தகப்பனாரின் கல்யாணம் நடக்கப் போகிறபடியால், எனக்கு வியாழன், வெள்ளி — இரு நாட்களுக்கும் லீவு கொடுக்கும்படி தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்' என்று எழுதியிருந்தாள்! ஆசிரியர் அவளுடைய விண்ணப்பத்தை வகுப்பில் படித்துக் காட்டி விட்டு, சிறு வேடிக்கையும் செய்திருந்தார். அதனால் வகுப்பில் உள்ள அனைவரும் அவளைக் கேலியாகப் பேசியும், கிண்டல் செய்தும் நகைக்கவே, அவள் 'ஓ'வென அழுது விட்டாள். ஆசிரியர் அவளைத் தேற்றி விட்டு, மற்றவர்களையும் கண்டித்திருந்தார்.

இப்போது நடந்து கொண்டிருப்பது கல்யாணியின் தகப்பனாருக்குக் கல்யாணம்! அதாவது, அவளுடைய அம்மாவின் இடத்திற்கு இன்று முதல் ஒரு புதிய அம்மா!

முட்டிக் கால்களின் மீது கவிழ்ந்து கிடந்த அந்த முகத்தின் விழிகளில் இலேசான நீர்த் துளிகள் அரும்பியிருந்தன. அவள் அதை மிகச் சாமர்த்தியமாகத் துடைத்துக்கொண்டு விட்டாள். ஆனால் நெஞ்சிலோ?

இந்தப் புதிய அம்மா, அவளுடைய அம்மாவின் நகைகளைப் போட்டுக் கொள்வதற்கு — அம்மாவின் பட்டுப் புடவைகளை உடுத்திக் கொள்ளுவதற்கு — அம்மாவின் பெட்டியிலுள்ள...?

இதற்காக வெல்லாம்தானே இந்தப் புதிய அம்மா இப்போது அப்பாவிடம் வருகிறாள்?

மாலா கல்யாணியின் தோளைப் பற்றியசைத்து, அன்புடன் அழைத்தாள். அப்போது ஊஞ்சலில் அமர்ந்திருந்த பாசஞ்சர் படை முழுவதும் பரபரப்புடன் இறங்கிப் பந்தலுக்கு வெளியே ஓட்டம் பிடித்தன. கல்யாணி சட்டெனத் தலை தூக்கினாள். கையைத் தட்டியபடி, "டேய் சீனு! வெளியே ஓடாதே. இங்கே வா; சட்டை, டிராயரெல்லாம் அழுக்காகி விடும்" என உரத்துச் சத்தமிட்டாள். அவளுடைய கூப்பாடு சீனுவின் காதுகளில் விழவில்லை.

மாலா கல்யாணியை நோக்கி, "இந்தப் பாவாடை என்ன விலையடி?" என்றாள்.

"நாற்பத்தேழு ரூபாய்ன்னு எங்க அத்தை சொன்னாள்" என்றாள் கல்யாணி. அவளுடைய பதிலில் உற்சாகமில்லை.

மாலா சட்டெனத் தன் முகத்தை நொடித்துக் கொண்டாள். "ஊக்கும்! இது ஒன்றும் நாற்பத்தேழு ரூபாய் இருக்காது. இது—"

"பின்னே என்னவாம்? நாலேகால் ரூபாயோ? என் தம்பி, சீனுவின் டிராயர் சட்டைத் துணிக்கே பதினேழு ரூபாய் ஆகியிருக்கு!"

மாலா பெருமூச்சுவிட்டபடி, "உங்களுக்கென்னம்மா, நீங்கள்ளாம் பணக்காரான்! வாங்க முடியும்" என்றாள். அவளுடைய வார்த்தையிலிருந்து தீப்பொறியாகத் தெரித்திடும் பொறாமைக் குணத்தைக் கண்டு கல்யாணிக்கு வியப்புத்தான் ஏற்பட்டது. அவளை நோக்கிப் பொய்க் கோபத்துடன், "போடியம்மா, நீ இப்படி யெல்லாம் பேசினால் அப்புறம் உன்னோடு நான் பேசவே மாட்டேன்" என்று கூறிக் கொண்டே சட்டெனத் தான் கட்டியிருந்த மணல் கோபுரத்தைக் கையினால் தட்டி விட்டாள். மாலா தலை குனிந்தபடியே மணலைத் துழாவினாள். அப்போதுதான் மேளச் சத்தம் ஓய்ந்திருந்தது. அவர்களுக்குச் சமீபத்தில் பந்தலுக்கு வெளியே நடந்து கொண்டிருந்த ஒரு சர்ச்சை தெளிவாகக் கேட்டது:

"ஓஹோய்யா! இவப்பாவுக்கு இப்போதான் கல்யாணமாம் டோய்! அப்படின்னு இவன் எப்படிப் பொறந்தானும்?"—இப்படியொரு வாண்டுப் பயலின் குரல் உரத்துக் கேட்டது. அதைத் தொடர்ந்து கைத் தட்டலும் கும்மாளச் சிரிப்புக்களும் பலப் பல இளம் குரல்களின் மூலம் வெளியாயின. இவற்றிற்கிடையே, 'ரீல்' என்ற தனித்தவொரு கீச்சுக் குரலும் ரயிலின் ஊதுதலும் போன்று கேட்டது.

அதே கணம் பட்டென எழுந்தாள் கல்யாணி. கீற்று மறைப்பை நீக்கிக் கொண்டு வெளியே நோக்கினாள். அங்கே கண்ணைக் கசக்கிக் கொண்டு அழுதுகொண்டிருந்தவன் அவளுடைய தம்பி சீனுதான். அவனுடைய சில்க் சட்டை முழுவதிலும் இரத்தக் களறி போன்று சாது உருண்டையின் வெப்பு முத்திரைகள் விழுந்திருந்தன!

கல்யாணி பதறிக் கொண்டே பந்தலை விட்டு வெளியே ஓடி வந்தாள்.

"அதோ ஓடுறான்! அதோ ஓடுறான் குண்டு சுந்தரம்! அவன்தான் அந்தச் சாதவுருண்

டையை இவன் மேலே வீசியடிச்சான்!''— இந்தப் புகாரைப் பலப் பல குரல்கள் வெளியிட்டன. அவர்கள் சொன்ன செய்தி உண்மைதான். அந்தக் குண்டு சுந்தரம் தலை தெறிக்க ஓடிக் கொண்டிருந்தான் — அவன் தான் மாலாவின் தம்பி!

கல்யாணிக்குத் துக்கம் நெஞ்சைப் பிளந்து கொண்டிருந்தது. சீனுவின் மேலிருந்த பருக்கைகளை யெல்லாம் தட்டிப் போக்கி விட்டு, அவனைக் கைப் பிடியாக இழுத்துக் கொண்டு வேகமாக வீட்டுக்குள் நுழைந்தாள். அங்கே — முற்றத்துப் பந்தலைச் சுற்றிலும் தாழ்வாரம் கூடம் எங்கிலும் கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தது. ஆனால் கல்யாணிக்கும், சீனுவுக்கும் மட்டில் உள்ளே போவதற்கு வழி கிடைத்தது. கூட்டத்தில் புகுந்தடித்துக் கொண்டு, வீட்டின் மறுகோடியிலிருந்த அடுக்களைக்கு வந்து சேர்ந்தாள். அங்கே நின்று கொண்டிருந்த அத்தையின் இடுப்பைச் சுற்றிக் கட்டிக் கொண்டு, 'ஓ'வென அழத் தொடங்கி விட்டாள். அவளது நெஞ்சுக்குள் குமிழியிட்டுக் கொண்டிருந்த துயரமெல்லாம் அணையை உடைத்துக் கொண்டு பாயும் பெரு வெள்ளம் போன்று வெளியாயிற்று. அத்தை பதறி விட்டாள். அருகிலிருந்தோரெல்லாம் ஓடி வந்து விசாரிக்க முற்பட்டனர். ஆனால் விவரத்தைக் கூறும் சொல் தெம்பு அவளுக்கு இருந்தால்தானே?

சிறிது நேரத்துக்குப் பின், அத்தை அவளையும் சீனுவையும் தனியான உக்கிராண அறைக்குள் அழைத்துப் போனாள். அன்பும் பாசமும், பரிவும் பொங்கும் இதயத்தோடு அவர்களைத் தழுவிக் கொண்டு விசாரிக்கத் தலைப்பட்டாள். கல்யாணி அத்தையின் முகம் பார்த்து விம்மியபடியே, ''அத்தை, இந்தக் கல்யாணம் இப்போது எதற்காக நடக்கிறது?'' என்றாள் சற்றும் களங்கமின்றி.

அவளுடைய கேள்வி அத்தையின் நெஞ்சுக்கு அனலின் தகிப்பாக உணர்த்திற்று! ஒரு கணத்திற்குள்ளாக வெருண்டும் விட்டாள். கல்யாணியின் குறையை மிக எளிதாக மதிப்பிட்டிருந்த அவளுடைய முதுமை உள்ளத்திற்கு, இந்தக் கேள்வியே ஒரு முதுமைத் தன்மை கொண்டதாக அல்லவா விளங்குகிறது? இதற்குச் சிரிப்பதா, அழுவதா அல்லது அவளைக் கடிந்து கூறி அனுப்புவதா? எந்த வகையில் சமாதானப்படுத்துவது என்ற தீர்வே அவளுக்குப் பிடிபடவில்லை! அவளைத் தழுவியபடியே, ''குழந்தை, உங்கப்பாவின் கல்யாணத்தை நீங்கள்ளாம் பார்த்ததில்லேயோல்லியோ? அதற்காகத்தான் இப்போது நடக்கிறது'' என்றாள் சிரித்துக் கொண்டே. ஆனால் இது உண்மையான காரணமில்லை; உண்மையான சிரிப்புமில்லை யென்பது கல்யாணிக்குப் புரியாமல் இருக்குமா? சீனு மட்டிலும் நம்பி விட்டான்!

அத்தை அவளை மேற்கொண்டு விசாரிக்க விரும்ப வில்லை. அவளது கேள்விகளை ஓட்டி வார்த்தைகளை வளர்த்தினால், அவை அவ்விளம் நெஞ்சில் பெரும் பிரச்சினையாக விரிவடைந்து விடுமென்ற பயம் தட்டியது.

முகூர்த்தம் முடிந்ததும், அத்தை கல்யாணியையும் சீனுவையும் தேடினாள். கூடத்துப் பந்தியில் சீனு மட்டிலும் அமர்ந்திருப்பதைக் கண்டாள். ஆனால் கல்யாணி? அவளைக் காணோம்! அத்தை மிகுந்த கவலையுடன் எல்லோரையும் விசாரித்துக் கொண்டே வாசற்புறம் சென்று விட்டாள்!

அதே சமயத்தில் — சந்தடியில்லாத மாடியறைக்குள், காகிதமும் பேனாவுமாக அமர்ந்திருக்கும் கல்யாணியின் நிலைமை ஒருவருக்குமே தெரியாது!

கல்யாணிக்கு வயிற்றில் பசியேயில்லை. அவளுடைய பசி. மனத்திற்கும் கரத்திற்குமேயிருந்தன. அவளுடைய அப்பாவின் கல்யாண வரலாறு முழுமையும், எழுத்துருவாக அவளுடைய நெஞ்சிலே உருக் கொண்டு விட்டன. கட்டுரையின் மேல்புறத்திலே, 'எங்கப்பாவுக்குக் கல்யாணம்' என்ற தலையங்கத்தைப் போட்டு, அதன் கீழ் கோடிட்டாள். அதன் பின்னர், அவளது கரத்திற்கு ஒரே ஓட்டம்தான் — மூக்கால் மணிப் பிரயாசைக்குள்ளாகக் கல்யாணியின் கட்டுரை உருப்பெற்று விட்டது :

ஒரு வாரத்துக்கு முன்னால், அத்தை என் தம்பி சீனுவிடம், ''உங்கம்மா ஊரிலிருந்து வரப் போகிறாள்' என்று சொன்னாள். சீனு அவளுடைய வார்த்தையை நம்பவில்லை. அவன் என்னிடம் வந்து அத்தை சொன்ன செய்தி நிஜந்தானா என்று கேட்டுக் கொண்டிருந்தான். என்னால் அவனுக்குப் பதில் சொல்லவே முடியவில்லை. நான் பதில் சொல்லா விட்டால் அவன் அழத் தொடங்கி விடுவான். சாப்பிடவும் மாட்டான். அப்புறம் அவனைச் சமாதானப்படுத்தவே முடியாது. ஆகவே, நானும் அவனிடம் அம்மா ஊரிலிருந்து வரப் போகிறாள் என்று பொய் தான் கூறிக் கொண்டிருந்தேன். ஆனால், இரண்டு நாட்களுக்குப் பின்னர்தான், அத்தை என்னிடம் 'உங்கப்பாவுக்குக் கல்யாணம் நடக்கப் போகிறது; உனக்குப் புது அம்மா வரப் போகிறாள்; அவள் ரொம்ப அழகாக இருப்பாள், உன்னிடமும், சீனுவிட



றும் ஆசையாக இருப்பான்' என்று சொன்னான். அதன் பிறகுதான் எனக்கு நன்றாகப் புரிந்தது. நான் அப்போதும் உண்மையான விவரத்தைச் சீனுவிடம் கூறவில்லை. ஏனென்றால், அவன் அம்மா ஊருக்குப் போயிருப்பதாகத்தான் இன்னமும் எண்ணிக் கொண்டிருக்கிறான். பாவம், மனிதர்களின் சாவைப் பற்றியே அவனுக்குத் தெரியாது !

போன வருஷம் எங்கம்மா செத்துப் போன போது, சீனு இவ்விடம் இல்லை. என் தாத்தாவுடன் பம்பாய்க்குப் போயிருந்தான். அப்பாவின் தந்தியைப் பார்த்தவுடனேயே, தாத்தா அவனையும் அழைத்துக் கொண்டு வந்து விட்டார். ஆனால் அவன் அம்மாவைப் பார்க்கவேயில்லை. அம்மாவின் கழுத்தில் பெரிய ரோஜாப் பூ மாலை போட்டு, அப்பா போட்டோ பிடித்து வைத்திருந்தார். சீனு அதைத்தான் பார்த்தான்.

சீனுவுக்கு ரோஜாப் பூ என்றால் ரொம்பப் பிரியம். அது அழகாக இருப்பதற்காக இல்லை, தின்பதற்காக! புழக்கடைப்புறத்துச் செடிகளில் ரோஜாப்பூ மலர்ந்தவுடனேயே பறித்துத் தின்று விடுவான். ரோஜாப் பூ சூடிக் கொண்டு சிலர் ஊருக்குப் போனதை யெல்லாம் அவன் பார்த்திருக்கிறான். ஆகவே, போட்டோவில் அம்மா ரோஜாப் பூ மாலையுடன் இருப்பதைப் பார்த்ததும், அம்மாவும் ஊருக்குத்தான் போயிருக்கிறாள் என்பது அவனுக்குள்ள நம்பிக்கை!

எங்கப்பாவுக்குக் கல்யாணம் என்பதைக் கேட்டவுடனேயே எனக்கு ரொம்ப சந்தோஷம். ராத்திரி யெல்லாம் தூக்கமே வரவில்லை. என்னுடைய சந்தோஷத்தை யெல்லாம், என் வகுப்பில் உள்ளவர்கள் கெடுத்து விட்டார்கள். எங்கப்பாவுக்குக் கல்யாணம் என்று நான் பொய்யாகவா எழுதினேன் ?

மூந்தா நாள் முதல் எங்கள் வீட்டுக்குப் பல ஊர்களிலிருந்தும் நிறையப் பேர்கள் வந்திருக்கிறார்கள். எங்கள் வீட்டு வாசலில் எவ்வளவு பெரிய பந்தல் போட்டிருக்கிறது? எத்தனை கார்கள், எத்தனை வண்டிகள் வந்திருக்கின்றன? இதையெல்லாம் கண்டதும் சீனுவுக்கு ரொம்பக் குஷி. நேற்று ராத்திரி அத்தை எங்களுடைய புது அம்மாவைச் சீனுவுக்குக் காட்டி, 'இதோ பாருடா, உங்கம்மா ஊரிலிருந்து வந்துவிட்டாள்' என்று சொன்னாள். அதற்கு அவன், ''போ அத்தை! நீ பொய் சொல்றே. அம்மா வொண்ணும் இப்படி இருக்க மாட்டாள்'' என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு ஓடி விட்டான். ஆனால் இன்றைக்கு முகூர்த்தத்தில் கல்யாணத்தின்போது நான் சொன்னதும், சந்தோஷத்தினால் குதித்துக் கொண்டே ''அம்மாம்மா, நம்ப அம்மாதான்!'' என்றான் ஆச்சரியப்பட்டுக் கொண்டே. இதற்குக் காரணம் இப்போதுதான் புரிகிறது. எங்கள் புது அம்மா இன்றைக்குப் பச்சைப் புடவை உடுத்தியிருந்தாள். கழுத்தில் ரோஜாப்பூ மாலை போட்டிருந்தாள். இதனால் அவனுக்கு நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. அவன் அவளுடைய மாலையிலிருந்து உதிரும் ரோஜா இதழ்களை யெல்லாம் பொறுக்கி, டிராயரை நிறையத் திணித்துக் கொண்டான்.

முகூர்த்தம் முடிந்ததும், நானும் சீனுவும் அத்தையிடம் ஓடிவந்தோம். அப்போது அப்பாவும், எங்கள் புது அம்மாவும் சேர்ந்தாற்போல் வந்து அத்தைக்கு நமஸ்காரம் செய்தார்கள். அத்தை அவர்களுக்கு ஆசீர்வாதம் சொன்னாள். அங்கே, அப்பா என்னையும், சீனுவையும் இரண்டு கைகளாலும் சேர்த்துக் கட்டிக் கொண்டு ரொம்ப நாழிகை வரையிலும் பொம்மையைப் போல் நின்று விட்டார். அவருடைய கண்ணிலிருந்து நிறைய ஜலம் வந்து விட்டது. சீனு அதைப் பார்த்துவிட்டான். என் காதுக்குள்ளாக 'அப்பா ஏன் இப்படி அழுறார்?' என்றான். நான் அவனுக்குப் பதில் சொல்லவேயில்லை. ஏனென்றால், எனக்கும் அது புரிந்தால்தானே?

எல்லோரும் அண்ணாவின் கல்யாணத்தைப் பார்த்திருக்கிறார்கள். அக்காவின் கல்யாணத்தைப் பார்த்திருக்கிறார்கள். ஆனால் யாரும் அப்பாவின் கல்யாணத்தைப் பார்த்திருக்க மாட்டார்கள். நானும் என் தம்பி சீனுவும் மாத்திரம் எங்கப்பாவின் கல்யாணத்தை நேரிலேயே* பார்த்தோம். இன்றைக்குத்தான் எங்கப்பாவுக்குக் கல்யாணம்!

# புதிய பிலிப்ஸ்

# மேஸ்ட்ரோ

## மிக நூதன இரு தொழில் நுணுக்கங்களுடன் முதன் முதலாக இந்தியாவிலே!

★ 'பை-காப்' பாண்டு ஸ்ப்ரெடிங்— உலகெங்குமுள்ள நூற்றுக் கணக்கான சிற்றலை நிலையங்களை முன்னேவிட மிகச் சரியாகத் திருப்புவதற்கு.

★ 'பாண்டு-விட்த்' கண்ட்ரோல்— மிக நெருங்கியுள்ள நிலையங்களிலிருந்து எழும் மெல்லிய தொந்தரவுக் குரல்களைத் தடுத்து, நிகழ்ச்சிகளை மிகத் தெளிவாகக் கேட்பதற்கு.

★ இவை தவிர, பிரத்தியேகமான பிற பல நோவோஸோனிக் அம்சங்கள்.





மாடல் : பி6எக்ஸ்37ஏ
ஏஸி மின்சாரத்தில்
இயங்குவது
விலை ரூ. 898/-

**பிலிப்ஸ் ரேடியோ டீலரைக் கேளுங்கள்**

சரியான ரேடியோவைத் தேர்ந்தெடுப்பதற்கும் அது சிறப்பாக இயங்குவதற்கும் அவர் உங்களுக்கு உதவி செய்யக் காத்திருக்கிறார். அதிகாரம் பெற்ற ஒவ்வொரு பிலிப்ஸ் டீலருடனும் பிலிப்ஸ் தொழிற்சாலையில் பயிற்சி பெற்ற தொழில் வல்லுநர்கள் இருக்கின்றனர் — மேலான பிலிப்ஸ் ரேடியோ பாகங்களையும் நிறைய வைத்திருக்கின்றனர்.

## பிலிப்ஸின் அற்புதமான ரேடியோக்களில் சில :



**பிலிப்ஸ் மேஜர்**
மாடல்; பி5எக்ஸ்17ஏ/01
ஏஸி மின்சாரத்தில்
இயங்குவது
**விலை ரூ. 645/-**



**பிலிப்ஸ் பிலெட்டா**
மாடல்; பி2எக்ஸ்37யு
ஏஸி/டீஸி மின்சாரத்திற்கு
**விலை ரூ. 245/-**

**பிலிப்ஸ் ட்ரான்ஸிஸ்டர் எஸ்**
மாடல்; பி5எக்ஸ்39டி
**விலை ரூ. 665/-**

**பிலிப்ஸ் ட்ரான்ஸிஸ்டர் பிலெட்டினு**
மாடல்; பி2எக்ஸ்29டி
**விலை ரூ. 278/-**

**பிலிப்ஸ்**
**நோவோஸோனிக்**
**ரேடியோ**




விலைகள் உள் நாட்டு வரி உள்பட (பிற வரிகள் தனி). உயர்ந்த தரம் * எண்ணற்ற வகைகள்

JWTPHR/1700 TAM

# கடைசி யுத்தம்

"மேனா"

நியூயார்க் நகரத்துக்குப் பக்கத்திலுள்ள ஒரு குன்றுப் பிரதேசம். அங்கே ஒரு சிறிய வீடு. தாடியும் மீசையும் அடர்ந்து கிடந்த முகத்தையுடைய ஒரு முதியவர் கனமான கம்பளி ஆடைகளை அணிந்து ஏதோ தீவிரமாக எழுதிக் கொண்டிருந்தார். ஒவ்வொரு வரி எழுதி முடிக்கும்போதும் பெரிய யுத்த களத்தில் ஓரடி முன்னேறுவது போன்ற உணர்ச்சி அவருக்கு ஏற்பட்டது.

உடம்பெல்லாம் ஒரே வலி. உள்ளமோ இந்த மனிதருடைய எழுதும் பிடிவாதத்துக்கு இணங்க மறுத்துத் தகராறு செய்தது. குடும்பத்தினரோ, அவரை எழுதாமல் ஓய்வெடுத்துக் கொள்ளும்படி கெஞ்சிக் கதறி வேண்டினர். ஊஹூம்! அந்த மனிதர் அசைந்து கொடுக்கவில்லை. கையில் எடுத்த பேனாவைக் காலையிலிருந்து இரவு வரையில் கீழே வைப்பதுமில்லை.

பல ஆண்டுகள் சிறந்த பணி ஆற்றியும் அவரால் தம் குடும்பப் பொருளாதாரத்தை உயர்த்திக் கொள்ள முடியவில்லை. ஓய்வு பெற்றபின் அவர் நிதி நெருக்கடிக்குள்ளாயிற்று. இருக்கும் வீடுகூட அவருடைய மகனின் முன் யோசனையில்லாத வியாபார முதலீட்டில் மூழ்கிக் கையை விட்டுப் போகக் காத்திருந்தது. போதும் அவர் உடலில் புகுந்து ஓட்டிவிட்ட வியாதி அவரை இன்னும் நெடுநாட்கள் உயிருடன் விட்டு வைக்காது என்று தெரியும். தன் குடும்பத்தினரைத் தனக்குப் பின் வறுமைப் பிணியிலிருந்து காப்பாற்ற என்ன வழி செய்வது என்று மனத்தைக் குடைந்து கொண்டார். ஒரே வழிதான் புலப்பட்டது. தம் வாழ்க்கை அனுபவங்களையும் நினைவுகளையும் எழுதிப் புத்தகமாக வெளியிடச் செய்தால் அதன் மூலம் கிடைக்கும் உரிமைத் தொகை குடும்பத்தினரைக் காப்பாற்றும் என்பதுதான் அந்த ஒரே வழி.

அவ்வளவுதான்; எழுத ஆரம்பித்தார். கைவிரல்கள் வலி எடுக்கும் வரை எழுதுவார். சிறிது ஓய்வு கொடுத்து விட்டு மீண்டும் அந்த விரல்களை விரட்டுவார். இடையில் உடல் நோய் வேறு உபத்திரவப் படுத்தும். மீண்டும் சற்று ஓய்வு. உடனடியாக அடுத்த பாராவுக்குத் தாவுவார். அவர் எழுதிய பக்கங்கள் ஒரு பக்கமாகக் குவிந்து கொண்டு வந்தன.



குடும்ப டாக்டர் எச்சரிக்கை செய்தார். இந்த விடாமுயற்சி விபரீதத்தில் முடியும் என்று எடுத்துச் சொன்னார். பூரண ஓய்வு உடனடியாகத் தேவை என்றார்.

ஆனால் அந்தப் பிடிவாதக்காரர் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை. அவருடைய உடல் நோய் அவரைப் பேச விடாமல் தொண்டையைப் பாதித்திருந்தது: தம் பதிலை எழுதிக் காட்டினார்.

"என்னுடைய வாழ்க்கையில் எதைச் செய்ய நினைத்தாலும் எங்கு போக நினைத்தாலும் முன்னேறிக் கொண்டு போகத்தான் பழகியிருக்கிறேனே தவிர தயங்கி நிற்கவோ பின்னால் பார்க்கவோ என்னுடைய மூட நம்பிக்கை இடம் கொடுத்ததில்லை. இந்த விஷயத்திலும் அப்படித்தான்!" என்ற எழுத்து மூலமான பதிலைப் பார்த்து விட்டு டாக்டர் மௌனமாக வெளியேறினார். நோயாளி அடுத்த பக்கத்தில் பேனாவை ஓட்டத் தொடங்கினார்.

ஒரு சமயம் திடீரென்று அவருக்கு ரத்தப் போக்கு ஏற்பட்டு விட்டது. டாக்டர் கைகளைப் பிசைந்தார். கடைசி நேரப் பிரார்த்தனைக்காகப் பாதிரியார் கூட வரவழைக்கப்பட்டார். ஆனால் ஏமாந்து போனவர்கள் டாக்டரும் பாதிரியாரும்தான். சற்று நேரத்துக்கெல்லாம் அந்த நோயாளி மீண்டும் எழுந்து உட்கார்ந்து கொண்டு எழுத ஆரம்பித்து விட்டார்.

இந்தச் சம்பவம் நடந்து பதினொரு மாதங்கள் ஓடிய பிறகுதான் எடுத்த வேலையை முடித்தார். கடைசி வரியையும் எழுதிப் பேனாவைக் கீழே வைத்தார். அவர் உள்ளத்தில்தான் எத்தனை நிம்மதி!

அவருடைய நோய் முற்றி அவரைப் பேச முடியாதவராக ஆக்கி விட்டிருந்தது. ஒரு துண்டுப் பக்கத்தில் குடும்ப டாக்டருக்குச் சீட்டு எழுதினார்.

"நான் தயார். என்னைப் போல் ஆனந்தத்துடன் மரண தேவனை எதிர்பார்த்து இந்தக் கணத்தில் யாரும் இருக்க முடியாது. என் வேலையை முடிக்க இறைவன் கருணையுடன் போதிய அவகாசம் கொடுத்து விட்டார். இனி என் குடும்பத்தினர் சந்தோஷமாக இருக்கவும் வழி காட்டுவார்" என்று அவர் எழுதினார். அப்புறம் அவர் ஒரே ஒரு வார காலம் மாத்திரம்தான் உயிருடன் இருந்தார். நிம்மதியாக உயிர் துறந்தார்.

அமெரிக்கத் தளபதிகளில் ஒருவராகப் பணியாற்றிய ஜெனரல் யூலிஸஸ் எஸ். கிராண்ட் என்பவர்தான் அந்தப் பிடிவாதக்கார எழுத்தாளர். அவருடைய 'நினைவும் அனுபவங்களும்' புத்தகமாகப் பிரசுரிக்கப்பட்ட போது அவருடைய குடும்பத்தினருக்கு நான்கு லட்சத்து ஐம்பதினாயிரம் டாலர்கள் (சுமார் இருபத்திரண்டரை லட்சம் ரூபாய்கள்) அந்தப் புத்தகத்துக்கு உரிமைத் தொகையாகக் கிடைத்தன. அந்தத் தளபதி தம் கடைசி யுத்தத்திலும் வெற்றி பெற்றுவிட்டார்.

(ஆதாரம்: காரனெட்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

REGISTERED No. M. 4393
…gistered as a Newspaper in Ceylon